Registered No. M. 2330 "SIDDHANTHAM"
Vol. 39—No. 2



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்கட னடியேனையுந் தாங்குதல்
என்கட னபணி செய்து கிடப்பதே'

மலர் 39 | விசுவாவசு மாசி பிப்ரவரி 1966 | இதழ் 2

உள்ளுறை

பக்கம்



பத்திராசிரியர் : மு. அருணாசலம், எம். ஏ.,
உதவிப் பத்திராசிரியர் : வித்துவான் அம்பை. இரா. சங்கரன்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்,
12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

ஆண்டுச் சந்தா ரூபா. 3 தனிப்பிரதி அணா 4

## சமாஜச் செய்திகள்

27—2—66 ஞாயிறன்று காலை 9-30க்கு சமாஜ அலுவலகத்தில் செயற்குழுக் கூட்டம் நிகழும். உறுப்பினர்கள் யாவரும் தவருது வருமாறு கேட்டுக் கொள்ளப் பெறுகிருர்கள்.

சமாஜ உறுப்பினர்கள் தங்கள் புத்தாண்டு சந்தாத் தொகையை விரைவிலனுப்பி வைக்குமாறு வேண்டுகிறோம். பலர் இரண்டு திங்களாக வேண்டுகோள் விடுத்தும் இன்னும் சந்தாவை அனுப்பி வைக்கவில்லை. ஆகவே இது கண்டதும் உடனே சமாஜச் செயலாளர் முகவரிக்கு உங்கள் முழு விலாசத்துடன் M. O. அனுப்புமாறு கேட்டுக் கொள்கின்ருேம்.

நம் சமாஜ வயிர விழா சிதம்பரத்தில் அண்மையில் நிகழ்ந்தபோது வெளியிட்ட நூல்கள் ஏழு :—

அவை 1. சமாஜ வயிர விழா மலர்.

சிறந்த அறிஞர்களால் எழுதப்பட்ட 37 கட்டுரைகளைக் கொண்டது. 200க்கு மேற்பட்ட பக்கங்களைக் கொண்டது. நம் சமயத்தையும் சமாஜத்தையும் வளர்த்த பழம் பெரியார்களின் திருவுருவப் படங்களையும் கொண்டது.

விலை ரூ. 2-00.

2. சிவஞானபோதம் தமிழ் முதல் நூலே மொழி பெயர்ப்பல்ல (120 காரணங்கள்)

இதனை எழுதியவர் காலஞ்சென்ற பெரியார் மா. பாலசுப்பிரமணிய முதலியார் B.A., B.L. ஆவர். அழகிய முன்னுரைகளுடன் கூடியது. விலை ரூ. 0-50.

3. முருக வழிபாடு அல்லது முருக தத்துவ அருள்விரத வழிபாடு.

இதை எழுதியவர் சமாஜத் தலைவர் திரு. கோ. மு. முத்துசாமி பிள்ளை I. A. S. (Retd.) ஆவர். சமாஜ வெளியீடாக திரு. கௌரிமுத்துக் குமாரசாமி நாயனுர் அவர்கள் பொருளுதவியால் வெளியிடப் பெற்றுள்ளது. இதில் முருகனைப்பற்றிய பல உண்மைகளை யெல்லாம் வெள்ளிடை மலையென ஆசிரியர் விளக்கியுள்ளார்.

விலை. ரூ. 0-50.

Reg. M. 2330 உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

மலர் 39 | விசுவாவசு மாசி 1966 பிப்ரவரி | இதழ் 2

## சைவம்

(ஆசிரியர்)

சைவம் என்பது யாது? இதைத் திருப்பித் திருப்பிச் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. 'சைவம் சிவனுடன் சம்பந்தமாவது' என்று திருமூலர் கூறுகிறார். எல்லாச் சமயங்களுக்கும் அடிப்படை ஒன்று உண்டு. சைவத்துக்கும் ஆணி வேரான ஒரு கருத்து உண்டு. அதுவே, எந்த உயிருக்கும் அன்பு செய்தல் – துன்பம் செய்யாமை; உயிர்கள் யாவும் ஆண்டவன் படைப்பு. புல் பூண்டு புழு பறவை மிருகம் மனிதன் யாவும் அவன் படைப்பு, யாவும் அவன் குழந்தைகள். எவ்வுயிர்க்கும் அன்பு செய்தல் என்பது, காலக்கிரமத்தில், துன்பம் செய்யாமை எனக் குறைந்து, பின்னர் கொல்லாமை–புலால் மறுத்தல் என்று பின்னும் குறைந்து போயிருக்கக் காண்கிறோம். எனவே இதுவே சைவத்துக்குக் குறைந்த அளவான அடிப்படை. இதை விட்டால் பின் சைவம் இல்லை. 'அன்பே சிவம்' என்பது திருமூலர் வாக்கு.

கடவுள் படைப்பில் மனிதன் வளர்ச்சி பெற்ற உயிர் பிராணி வளர்ச்சி பெறாத உயிர்; முறையே மூத்த பிள்ளையும் இளைய பிள்ளையும். மூத்த பிள்ளை இளைய பிள்ளையை வெட்டித் தின்ன, கடவுளாகிய தந்தை சம்மதிப்பாரா?

மக்கள் தங்களுக்குள் சாதி சமயம் குலம் கோத்திரம் என்று சண்டையிட்டுக் கொண்டிருந்ததைக் கண்ட ஒரு கோழி, அயல் நின்ற கோழியைப் பார்த்துச் சொல்லிற்றும்: "புலையன் மலத்திலும் அகப்படுவனவற்றைச் சீத்து உண்ணும் நம்மைக் கொன்று தின்னும் இம் மனிதப் பிறவிகளுக்குக், குலமென்ன கோத்திரமென்ன வந்தது?

புலையன்தன் மலமுண்ணும்
எமையுண்ணும் புலையர்க்குக்
குலமென்ன நலமென்ன
குக்கூ என் றன கோழி!"

புலால் உண்பதைப் பழிக்க இதைவிடப் பழிப்பான சொல் சொல்ல முடியாது.

திருக்குறள் ஆசிரியர் இதுபற்றி இரண்டு அதிகாரங்கள் அமைத்திருப்பதை நாம் மனத்தில் கொள்ள வேண்டும். புலால் மறுத்தல் என்ற அதிகாரத்தில் தாம் கூறியுள்ள கருத்துக்கள் போதவில்லை என்று அவர் மனத்தில் பட்டு, மீண்டும் கொல்லாமை என்ற ஓர் அதிகாரம் அமைத்திருக்கிறார். அவர் கேட்கின்ற கேள்விகள் மிகவும் ஆழமாய் நெஞ்சில் தைப்பன. தன் உடம்பைப் பெருக்கும் பொருட்டு வேறோர் உயிரின் உடம்பை உண்பவன் எவ்வாறு அருள் உடையவன் ஆவான்?

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊன்உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்? 251

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந் தொழும் 260

அறவினை யாதெனின் கொல்லாமை 321

ஒன்றாக நல்லது கொல்லாமை 323

என்ற வரிகளைக் காண்க.

ஒருவன், "நான் விமானம் ஓட்டுவதில் மிகவும் வல்லவன், துப்பாக்கிச் சுடுவதில் வல்லவன், விமானப்

படையில் சேர்த்து என்னைச் சீனப் போருக்கு அனுப்புங்கள்'' என்று கேட்டால், சேனதிபதியின் கருத்துப்படி இத்தகுதி போதாது. ''உனக்கு இந்தியாவிடம் பக்தி உண்டா?'' என்பது முதல் கேள்வி. ''இல்லை'' என்ற பதில் வந்தால், அவன் இராணுவத்தில் விலக்கப்படுவான். அதுபோல, சிவனடியான் என்ற சொல்லுக்கு முதற் பொருள் சைவன், புலால் மறுப்பவன் என்ற பொருளாகும்; ஆகவே புலால் உண்பவன் இங்கு விலக்கப்படுகிறுன் என்பது அடிப்படையான முதற் பொருளாகும்.

கண்ணப்பர் இறைவனுக்குத் தாம் வேட்டையாடிய பிராணிகளின் இறைச்சியை அமுதாக அளித்தார் என்ற செய்தி சொல்லப்பட்டது. கண்ணப்பர் ''பண்டை நல் தவத்தால் தோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும்'' சாமு சித்தர்களில் ஒருவர். அவருடைய அன்பு இறைவனையே உருக்கி அவர், செயலை, ''நில்லு கண்ணப்ப'' என்று சொல்லி நிறுத்தும்படி செய்தது. கண்ணப்பர் உதாரணம் இன்றைய உலகுக்குப் பொருந்துவதன்று. கண்ணப்பரை ஒப்பதோர் அன்பு தமக்கு இல்லையே என்று மாணிக்க வாசகர் இரங்குகிருர். கண்ணப்பர் போல அன்பு கொண்டு யாரேனும் இன்று கண் இடந்து அப்பவல்லார் களா? மாணிக்கவாசகருடைய அன்பு யாருக்கும் வராது என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். கண்ணப் பர் உதாரணம் எப்படிப் பொருந்தும்!

சுந்தரமூர்த்தி சுவாமிகள் சைவத்துக்கு விரிவான பொருள் கொடுத்த பெருமையுடையவர். தமிழ்நாட்டுக்கு அப்பாலும், அவர் காலத்துக்கு முன்னும் பின்னும் வாழ்ந்த அடியவர்கள் அனைவரையும் ''அப்பாலும் அடி சார்ந்தார்'' என்று பணிகிருர். எங்கிருந்து சிவனை வழிபடுவது என்ருலும், சிவபெருமான் என்ற பெயரையே சொல்லி வழிபடுவதாகாது. இலங்குயிர் அனைத்தினையும் ஈசன் கோயில் என்று யார் காண்கின்ருரோ அவரே இந்த அப்பாலும் அடி சார்ந்தார்; அவரே கொல்லாமை நோன்பு கடைப்பிடிப்பவர்; அவரே சைவர்.

மகாத்மா காந்தி இந்திய நாட்டுக்கு மட்டும் அல்ல, உலகம் முழுமைக்குமே ஓர் அன்பு நெறியை வகுத்துக் கொடுத்தார். அந்த நெறி கடவுள் என்ற மந்திரம்; அதில் ஒருபக்கம் அன்பு அல்லது அஹிம்சை, மறுபக்கம் சத்தியம் என்று நாம் எடுத்துச் சொல்லி மிகவும் பெருமைப் படுகிறோம். இந்த நிலையில் புலால் உண்ணுவதும் சைவம் ஆகும் என்று யாரேனும் கூறினால், அது இன்றைய சமயதர்மம் மட்டும் அல்ல, தேச தர்மத்திற்கே விரோதமான கருத்தாகும். ''சத்தியத்தையும் அஹிம்சையையும் கைவிட்டால்தான் சுதந்திரம் வருமென்றால், அந்தச் சுதந்திரம் எனக்கு வேண்டாம்'' என்ற வீறு உடையவர் மகாத்மாகாந்தி. சைவமும் அத்தகையதே.

அன்பு நெறி சைவம் என்ற ஒரு தீபம் உலகெங்கும் ஒளிவிட்டுக் கொண்டிருந்தது. கால வேகத்தில் அவ்வொளி மங்கிப் பல நாடுகளில் அணைந்து விட்டது. தமிழ் நாட்டில் மட்டும் அது பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அதை அணையாமல் காத்துப் பின்வரும் சந்ததியாரிடம் ஒப்புவிக்கும் பொறுப்பு நம்முடையது. சுழல் காற்று அடிக்கிறதே என்று நாமும் கைவிட்டு ஓட முடியாது. நம்முடைய பொறுப்பு மிகவும் பெரிது.

---

# பட்டினத்தார் துறவு

(R. பஞ்சநதம் பிள்ளை; தமிழ்ப் புலவர், திருச்சி)

காவிரிப்பூம் பட்டினத்தில் தோன்றி வாழ்ந்து துறவு அடைந்தவரே பட்டினத்தார் என்னும் திருவெண்காடர் ஆவர். துறவு அடைபவர் மூன்று வகையாகக் கூறப் படுவர். அவர்கள் பொருள் இல்லாமல் துறந்தவர், குடும்பத் தொல்லையால் துறந்தவர், எல்லாம் இருந்து துறந்தவர் ஆவார்கள். இவர்களில் எல்லா வகைச் செல்வங்களும் இருந்து துறந்தவர் பட்டினத்தார் ஆவர். இதனால் இவரை முற்றும் துறந்த பட்டினத்தடிகள் என்று புகழ்ந்து கூறுவர்.

பட்டினத்தார் துறவு அடைந்தது குறித்துப் பல வரலாறுகள் வழங்குகின்றன. இவர் மிகுந்த செல்வந்தராய் வாழும்போது இவர் உலகப்பற்றில் – பாசபந்தத்தில் அழுந்திவிடாமல் உயர் நெறியில் – சன்மார்க்கத்தில் செலுத்தும் பொருட்டு இறைவனே திருக்குமரனாக வந்து மருதவாணன் என்னும் பெயருடன் வாழ்ந்து வந்தான். மருதவாணன் மகிமையால் பட்டினத்தாருக்குச் செல்வம் பொங்கி வந்தது. சில ஆண்டுகளுக்குப் பின் மருதவாணன் தன் தாயாரிடத்தில் ஒரு சிறு பெட்டகத்தைக் கொடுத்து விட்டு மறைந்து சென்றான். பெட்டகத்தில் காதில்லாத ஊசியும், ஓர் ஓலைத்துண்டும் அதில் 'காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே' என்ற வரியும் காணப் பட்டன. இவைகளைக் கண்டதும் பட்டினத்தார் மனப் பக்குவம் பெற்றவராதலால் உடனே துறவை மேற்கொண் டார். இது ஒரு வரலாறு.

இனிப் பட்டினத்தார் புராணம் என்னும் நூலில் இவர் துறவு பெற்றதைக் கூறும் கருத்துக்களைப் பார்ப்போம். திருவிடைமருதூர்த் தெய்வநாயகனான மருதவாணன் 'காதில்லாத ஊசியையும், ஒரு நூல் துண்டையும் பட்டி னாற் சுற்றி ஒரு பெட்டியிலிட்டு முத்திரையிட்டுத் தன் தாயார் சிவகலையிடம் தந்து தந்தையிடம் கொடுக்கும்படி கூறி மறைந்துவிட்டான். இவைகளைத் தெரிவிக்கும்

1. திருவிடை மருதூர்த் தெய்வ நாயகன்
ஒருபுடைக் காதறை ஊசி வாசியால்
பிரிவுடைச் சரட்டொடு பேணி மானுறப்
பரிவுடைப் பட்டினாற் பயிலச் சூழ்ந்தரோ.

2. ஏற்றபூம் பெட்டியி லிட்டுக் கட்டுறத்
தேற்றமா முத்திரைச் சின்னஞ் சேர்த்தினான்
கோற்றொடி அன்னைகைக் கொடுத்துன் மைந்தனுக்கு
ஆற்றவி தளித்தியென் றகன்று போயினான்.

பட்டினத்தார் பெட்டியைத் திறந்து பார்த்தார். காதில் லாத ஊசியும், ஒரு நூல் துண்டும் இருந்தன. பார்த்த வுடன் துறவுஞானம் ஏற்பட்டது. பட்டினத்தார் மனப் பக்குவம் பெற்றவர். இறைவன் திருவருளும் கூடிற்று.

மனப்பக்குவத்தில் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்னும் படிநிலைகள் உண்டு. வாழைத் தண்டில் நெருப்புப் பிடிப்பது போன்றது மந்ததரம். பச்சை விறகில் நெருப்புப் பிடிப்பது போன்றது மந்தம். உலர்ந்த விறகில் தீப்பிடிப்பது போன்றது தீவிரம். கரியில் தீப் பிடிப்பது போன்றது தீவிரதரம். இவைகளில் கரியில் விரைவில் தீப்பிடிப்பது போன்ற மனப்பக்குவத்தை உடைய பட்டினத்தார் காதில்லாத ஊசியையும், நூல் துண்டையும்பார்த்தவுடன் துறவை மேற்கொள்ளலானர். காதில்லாத ஊசியும், நூலும் சில சாஸ்திர உண்மைகளை-நீதிகளை உணர்த்துகின்றன. காதுள்ள ஊசியில் நூல் ஏறும். காதில்லாத ஊசியில் நுழையாது. அதுபோல நம் காதுகளில் சாஸ்திரமாகிய நூல் ஏறவேண்டும். அதாவது சான்ருேர் அருளிய உயர்நூல் கருத்துக்களைக் கேட்கவேண்டும். ஞானம் அடைவதற்குக் கற்றலைவிடக் கேள்வியே சிறந்தது. 'கற்றிலனுயினும் கேட்க' என்றும் 'கற்றலின் கேட்டலே நன்று' என்றும் ஆன்ருேர் கூறுவர். நன்ருகக் கேட்டறிய வேண்டும் என்பதற்காகவே இயற்கையில் ஐந்து இந்திரியங்களில் காது முற்றும் திறந்தே உள்ளது. மேலும் காதுக்கும் நூலுக்கும் தொடர்பு உண்டு. (மாந்தர் ஒரு வேலையுமில்லாமல் சும்மா இருக்கும் வேளையில் ஒரு துண்டின் நூலை முறுக்கிக் காதில் விட்டுக் குடைவர்.) காதுக்கும் நூலுக்கும் உள்ள தொடர்பைப் புராண ஆசிரியர் பின்வருமாறு காட்டுகிருர்.

'காதில்நூல் போதல்நம் காதில் கல்விநூல்
போதலைக் குறிப்பினுற் புகன்ற பொற்புமாம்'

இனி நூல்துண்டு - பாசத்துண்டு, ஆணவம் - கன்மம் - மாயை என்னும் பாசங்களை நினைப்பூட்டி அவைகளை முற்றிலும் விடவேண்டும் என்பதையும் குறிக்கும் பதி பசு-பாசம் என்னும் மூன்றில் பசுவாகிய உயிர் பாசங்களினின்றும் நீங்கிப் பதியாகிய இவைனை அன்பினுல் அடைய வேண்டும் என்பது விதி. இதை

'சேதமிப் பாசம்நம் பாசச் சேதமாம்
மேதகும் உலகெலாம் விடுங்கு றிப்புமாம்'

என்கிறுர். இக்கருத்துக்களைக் கொண்ட முழுப்பாடலைப் பார்ப்போம்.

‘காதில்நூல் போதல் நம்காதிற் கல்விநூல்
போதலைக் குறிப்பினுற் புகன்ற பொற்புமாம்
மேதகும் உலகெலாம் விடுங்கு றிப்புமாம்
சேதமிப் பாசம்நம் பாசச் சேதமாம்’

— (பட்டினத்தார் புராணம்)

மேலும் சிவானுபவம் பெற்ற ஞானிகளுக்குக் கல்வியறிவும், கேள்வியறிவும் தேவையில்லை. அவர்களுக்கு நூலறிவும் வேண்டியதில்லை. ‘நூலும் வேண்டுமோ நுண்ணறிவோர்க்கே’ என்று அப்பர் கூறுகிறுர். ஒரு கலையும் கல்லாத கண்ணப்பரைக் கலை மலிந்த சீர் நம்பி என்று அழைக்கிறுர் சுந்தரர். எனவே அதிதீவிர பக்குவம் பெற்ற பட்டினத்தார் காதற்ற ஊசியையும் நூல் துண்டையும் கண்டவுடன் மனத்துறவு பூண்டார். பொதுவாக வாழ்க்கையில் இல்லறம் துறவறம் இரண்டும் அமைய வேண்டும். துறவென்பது எல்லாவற்றையும் விட்டுக் காட்டுக்குச் செல்வதன்று. உலக காரியங்களில் மிகுதியாக ஈடுபட்டிருந்தாலும், தாமரை இலையின் நீர் போல் மனம் பற்றற்று நிற்றல் வேண்டும். வீட்டிலிருந்தே துறவு நிலையை அடையலாம். தாயுமானவர் இல்லறமிருந்தே இதயம் அடக்கிய வல்லவராவர். பட்டினத்தார் போல ஆரும் துறத்தல் அரிது என்பர். காதற்ற ஊசியைப் போலவே உடலின் தன்மையும் உள்ளது என்பதை ‘காதற்றுப் போனமுறி கட்டிவைத்தால் ஆவதுண்டோ தீதற்ற காயமும் அச்செய்கையே’ என்று தாயுமானவர் கூறுகிறுர். காதுள்ள ஊசி பயன்படுவது போல, உடல் இருக்கும்போதே – காற்றுள்ளபோதே – இறைவழிபாடுகளை – நற்செயல்களைச் செய்ய வேண்டும். அங்ஙனம் செய்யாவிடில் காதற்ற ஊசிபோல் பயனில்லாமல் போய்விடும். எனவே பட்டினத்தாரின் வாழ்வு உலகினர்க்கு நல்ல பாடம் கற்பிக்கிறது. இவரிடம் பத்திரகிரியார் என்ற அரசர் ஞானுேபதேசம் பெற்றுத் துறவடைந்தார். பட்டினத்தார் பாடிய நூல்கள், சைவத்

திருமுறைகளில் பதினோராந் திருமுறையிற் சேர்க்கப் பட்டுள்ளன. அவைகளில் தம்முடைய அனுபவங்களைச் செம்மையாகக் காட்டுகிறார். நாமும் அவைகளைப் பயின்று நலமுறுவோமாக.

ஓட்டுடன் பற்றின்றி உலகைத் துறந்த செல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ.

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல்
ஆருந் துறக்கை அரிதரிது —தாயுமானவர்

---

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# வரவேற்புரை

அருள்புலிசை ஞானியார் அடிகள்முனர்,
மறைமலைநல் அடிக ளார்தாம்,
தெருள்பெருகு சீர்ச்சைவ சித்தாந்த
மகாசமாஜம், சிறக்கக் கண்டார்!
இருள்கடிந்து தமிழ்சிவம்என் றிரண்டினையும்
மிகப்பரப்பி இனிதே போற்றிப்
பொருள்மலிசீர்ப் பெரும்பணிகள் புரிந்து,அதுதான்
வைரவிழாப் பொருந்தி ஓங்கும்! 1

படியில் நீடும் பத்திமுதல், அன்பு நீரிற் பணைத்தோங்கக்,
கடிய வெய்ய அறியாமைக் களைகள் நீங்கக், கதிர்அறிவு
தடையின் றெங்கும் மிகத்தழைப்பத், தமிழ்நல் உழவர்
பயன்கொள்ள
வடிவிற் சமாஜப் பயிர்வளர்ந்து, வைர விழாவும்
வயங்கியதே! 2

நல்ல சைவ சித்தாந்த சமாஜம் எனும்நற் கற்பகம்தான்,
பல்ல துறையில் வேர்கொண்டு, பாங்கின் மலேயா
இலங்கைமுதற்
சொல்லும் தேஎத்தும் நிழல்பரப்பித்,
தொண்டாம் மலர்கள் பலபூத்துத்,
தில்லைத் தலத்தில் வைரவிழாச் சிறந்த கனியும்
பழுத்ததுவே. 3

இவ்வரிய வைரவிழா எழிற்றில்லைப் பெருந்தலத்தில்
இனிதே யாகச்
செவ்வியநன் முறைநிகழத், திருமுருக க்ருபானந்த
வாரிச் செம்மால்!
எவ்வெவரும் உளம்மகிழ்ந்தே இன்பமுறத் தலைமைநிலை
ஏற்றனையால்!
ஐய! நும தரும்பெருஞ்சீர், அளவில்பெரும்பணிகளெலாம்
அளத்தற் காமோ? 4

கலைநலத்தாற் சம்பந்தர், கனிந்தஅன்பில் மணிமொழியார்,
கருதும் தொண்டின்
நிலைநலத்தால் நாவரசர், நெறிவளர்ப்பிற் சுந்தரனார்,
நெஞ்சில் வீண்பற்
றிலநலத்தாற் பட்டினத்தார், இரக்கத்தால் இராமலிங்கர்
என்றி யம்பப்
பலநலத்தாற் சிறந்தொளிர்வோய்!
பண்புயர்நின் நலங்களெலாம் பகர்தற் காமோ? 5

அருமைமிகு பெருந்தகையோய்! அரியசைவ
நெறிவளர்க்கும் அறிஞர் ஏறே!
பெருமைமிகும் அருண்மொழிநற் பேரரசே!
திருப்பணிகள் பேணும் வேந்தே!
தருமநெறி தழைப்பிக்கும் சான்றோய்! நற்
சமாஜவிழாத் தலைவ! எங்கள்
திருமுருக க்ருபானந்த வாரிஎனும்
செம்மால்! நும் சிறப்பென் சொல்கேம்? 6

செம்மை மிகுநற் சமாஜத்தின் சிறந்த மாதர் மாநாட்டின்
மெய்ம்மை உயர்ந்த தலைவினை. மிகவும் அன்பிற்
போந்தருளி,
எம்மைப் பெரிதும் சிறப்பித்த இராதா தியாக
ராசன்எனும்
அம்மை! நின்னை மங்கையர்கட்கு அரசி எனவே
போற்றுகின்றோம்! 7

அன்பார்ந்து அறிவும் மிக்கொளிரும் அரிய எங்கள்
கலைஅன்னை!
இன்பார் தமிழ்த்தாய் எனவிளங்கும் இணையில் பண்பின்
பெருஞ்செல்வி!
முன்பால் வாழ்ந்த புனிதவதி, முதிர்ந்த தவத்தின்
திலகவதி,
என்பார் போன்றே மதித்துநினை, யாங்கள் பெரிதும்
மகிழ்கின்றோம்! 8

ஆங்கிலமும் திந்தமிழும் அருமைமிகு வடமொழியும்
ஆய்ந்து தேர்ந்தோய்!
தேங்குபெருங் கலைக்குரிசில்! திருஞான சம்பந்தச்
செம்மால்! நீதான்
ஈங்கினிய சித்தாந்த இளைஞர்களின் மாநாட்டில்
தலைமை ஏற்ற
பாங்கு,மிகப் பொருத்தம்எனப் பாராட்டிக்
களிக்கின்றோம்! பண்பின் வாழ்க! 9

வருக! வருக! என்றுநுமை வரவேற்று, அன்பு மீக்கூரப்
பெருகும் மகிழ்ச்சி மிக்கோங்கப், பேணி உவந்தே
போற்றுகின்றோம்!
உரிய முறையில் வைரவிழா ஒளியின் நிகழச், சமாஜத்தின்
அரிய தலைவர் என அமர்ந்து,உம் அருந்தொண் டாற்றி
வாழியரோ! 10

(இயற்றியவர் : திரு. ந. ரா. முருகவேள், M.A., M.O L.)

---

சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜம் 60-ஆம் ஆண்டு நிறைவு வைர விழா சிதம்பரத்தில் நிகழ்ந்தபொழுது. சைவர் மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய அருண்மொழியரசு திருமுருக கிருபானந்தவாரியர் அவர்களுக்கும், சைவ மங்கையர் மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய திருமதி. இராதா தியாகராசன் அவர்களுக்கும், சைவ இளைஞர் மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய திரு. பெ. திருஞானசம்பந்தம், M.A., L.T. அவர்களுக்கும் சமாஜத்தார் மனமுவந்து வழங்கியது.

# ஆசியுரை

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய சிவப்பிரகாச பண்டார சந்நிதி,
துறையூர் ஆதீன ஸ்ரீ குமாரதேவர் மடம்
19-ஆம் சிம்மாசனுதிபதி, விருத்தாசலம்.

இன்றைய உலகில் நிரீச்சுரவாதம் நிரம்பி வழிகின்றது. அதனைப் போக்கி சைவ சித்தாந்தச் சிறப்பினை உலகறியச் செய்யவேண்டும். அதனுல் உலக மக்கள் நன்மை அடைவார்கள். தற்கால உலகில் அதனைச் செய்வதற்குச் சாதனமாயுள்ளது இதழ்களை வெளியிடுதலேயாம். அவை உலக மொழியில் அமைந்திருக்க வேண்டும். அதனை உணர்ந்த சைவ சித்தாந்த சமாஜத்தார் வைர விழாவில் அப்பணியைத் தொடங்குவது சாலச் சிறந்ததாகும். இதழ் ஆசிரியராகத் தங்களை நியமித்திருப்பது பொருத்தமாகும். தாங்கள் குருலிங்க சங்கம வழிபாட்டில் சிறந்துள்ளமை நாம் அறிந்ததேயாகும். தங்களுக்கு நமது அன்பும் ஆசியும் உரியதாகுக. இது நாள்வரை ஆதீன மடாலயங்களும் சைவ சித்தாந்த சபைகளும், சமாஜங்களும் ஆற்றிவந்த பணிகளுக்கு இவ்விதழ் உறுதுணையாக உதவி செய்யும். வைர விழாவும் ஆங்கில சைவ சித்தாந்த இதழ் வெளியீடும் சிறப்பாக நடைபெற ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் திருவருளைச் சிந்திக்கின்ருேம்.

---

## தீர்மானங்கள்

2—1—1966ல் சிதம்பரத்தில் நிகழ்ந்த பொதுக் குழுக் கூட்டத்திற்கு அனுப்பிய தீர்மானங்கள் பரிசீலிக்கப்பட்டு கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன.

பின் வரும் முடிவுகள் ஏகமனதாக எடுக்கப் பெற்றன :—

1. தற்காலத்திற்கேற்ற வகையில் சமாஜ விதிகளைத் திருத்தியமைக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்பது.
2. மாவட்டங்களில் சமாஜக் கிளைகள் ஏற்படுத்த வேண்டுமென்பது.
3. சமாஜ நிகழ்ச்சிகளில் சைவ சித்தாந்தத் தத்துவத்திற்குச் சிறப்பிடம் தந்து அதனை வளர்க்க வழிமுறை காண வேண்டுமென்பது.

4. துண்டுப் பிரசுரங்கள் அச்சிட்டு வழங்க வேண்டுமென்பது.
5. வானொலியில் நால்வர் நாட்கள், சந்தான ஆச்சாரியார் நாட்கள் இவைகளில் அவரவர் நூல்களுக்குச் சிறப்பிடம் கொடுத்துத் திட்டம் வகுக்குமாறு செய்தல்.
6. செயற்குழு ஆண்டுவிழாவிற்கு முன்னர் ஒரு முறை வேலை முறைகளைச் சிந்தித்து வகுக்கத் திட்டம் செய்தல்.
7. ஆண்டு விழாவில் உறுப்பினர்களுக்கு உணவு, உறைவிடம் முதலிய வசதி தர கட்டணம் வகுத்து எதிர்காலத்தில் ஆண்டுவிழா நடத்தல்.
8. கோயில், Epigraphy, Iconography, Sculpture, Architecture இன்ன பிறவற்றை வளர்க்க முற்படுதல்.
9. சைவ சித்தாந்தத்தைப் பற்றித் தெளிவான உரைநடை நூல் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுத ஏற்பாடு செய்தல்.

பின், திரு மு. அருணாசலம் அவர்கள், மூன்று ஆண்டுகள் சமாஜச் செயலாளராக நல்ல முறையில் பணியாற்றிய திரு கொ. நீ. சிங்காரவேலு முதலியார் அவர்களைப் பாராட்டிப் பேசினார்.

பின்வரும் தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப் பெற்றது:—

"இப் பொது உறுப்பினர் கூட்டம், மூன்று ஆண்டுகள் சமாஜச் செயலாளராகச் சிறந்த பணியாற்றிய திரு கொ. நீ. சிங்காரவேலு முதலியார் அவர்களைப் பாராட்டுகிறது."

பின், சமாஜத் தலைவர் அவர்கள் தம் முடிவுரையில், சென்னை ஈவினிங் பஜாரில் உள்ள சமாஜக் கட்டடத்தை மாற்றி அமைத்து, மேல் மாடிக்கட்டடம் கட்ட தற்போதுள்ள யோசனையை எடுத்துக் கூறி, இக் கட்டடம் கட்டுவதற்கான சூழ்நிலை உள்ளது எனக் காரணங்களுடன் தெரிவித்தார்.

மேலும், தாம் இயற்றிய "பூம்பாவை" என்னும் நாடகத்தை சமாஜ ஆதரவில் நடத்தலாமென்றார். யாவரும் இவ்விரு யோசனைகளை ஏற்றுக் கொண்டனர்.

செயலாளர் யாவருக்கும் நன்றி தெரிவிக்க, கூட்டம் இனிது நிறைவேறியது.

கோ. மு. முத்துசாமி பிள்ளை, தலைவர். — கொ. நீ. சிங்காரவேலு, செயலாளர்,

## மதிப்புரை

### சன்மார்க்க சங்க நூற்றாண்டு விழா மலர்.

வெளியிட்டோர்:— திருச்சிராப்பள்ளி மாவட்ட சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம். நூல் கிடைக்குமிடம்:— திரு. ந. இரா. ஊரன், சமயபுரம் (P.O.) திருச்சி மாவட்டம். விலை ரூ. 2-00.

சமரச சுத்த சன்மார்க்க சங்கம் வடலூரடிகளாரால் 1865ல் நிறுவப் பெற்றது. 1965ல் அதற்கு நூற்றூண்டு விழா நிகழ்ந்தது. அதன் நினைவாக இம் மலர் வெளிவந்துள்ளது. மருத நிலத் தலைவனுக்கு ஊரன் என்பது பெயராகும். அவ் ஊரன் மனம் வைத்தால் செழிப்பே தவிர வறுமைக்கு வழியிருக்காது. குறுகிய காலத்தேயே இத்தகைய நன்மலரை வெளிவரச் செய்த அவ்வூரனரின் முயற்சி மிகவும் போற்றத்தக்கது. பல படங்கள், நல்ல தாள்கள், நல்ல அச்சு முதலிய எல்லா நற்பேறுகளையும் பெற்று மலர் புதுமணம் பெற்றுப் பொலிகின்றது. இம் மலர் 19 கட்டுரைகளைத் தன்னகத்தே கொண்டு மிளிர்கின்றது. இக்கட்டுரைகள் யாவும் வள்ளலார் பெருமை, வள்ளலார் சைவ சமயாச்சாரியார் அடியொற்றிப் பாடிய பெருமை, சைவ சமாயச்சாரியர்களிடத்தும் வள்ளுவர் போன்ற புலவர் பெருமக்களிடத்தும் வள்ளலாருக்கிருந்த ஈடுபாடு முதலிய பலதிறப்பட்ட செய்திகளைத் தெரிவிக்கின்றன.

வள்ளலார் திருவருட்பாவில் கூருத துறைகளே ஒன்றும் இல்லை எனலாம். சிறப்பாக ஆருந்திருமுறை அனுபவம் பழுத்து முதிர்ந்த வாக்குகள் எனில் அது மிகையாகாது. காலநிலைக்கேற்ப அவர்கள் தொண்டு நம் தமிழகத்துக்குக் கிடைத்தது ஒரு சிறப்பே.

அவ்வள்ளலாரின் வரலாற்றுக் காலக் குறிப்புகள், சைவ வுணவு பற்றிய விளக்கம் முதலிய பல சிறந்த செய்திகள் இம்மலரில் இடம் பெற்றுள்ளன. அன்பர்கள் படித்துப் பயன்பெற வேண்டுகின்றனம். — (அம்பை)

## முருகேசர் முதுநெறி வெண்பாவுரை

[விலை ரூ. 1-25. குமரன் செந்தமிழ் நூற்பதிப்புக் கழகம், 39 சபாநாயகர் வீதி, சிதம்பரம்]

திருக்குறளினுடைய கருத்தை விளக்கும் பொருட்டுப் பல வெண்பா நூல்கள் எழுந்தன. இவை பாடலின் முதல் இரு வரிகளில் ஒரு சரித்திரத்தைக் குறிப்பிட்டு, பின் வரிகளில் குறள் பாடல் ஒன்றை அப்படியே பெய்து வைத்திருக்கும். இவ்வாறு தோன்றிய நூல்களில் காலத்தால் முதலாவது தினகர வெண்பா 16ஆம் நூற்றாண்டு, பின்னர் தோன்றியவை ஒன்பது நூல் வரையில் உள்ளன. இவற்றுள் ஒன்று முருகேசர் முதுநெறிவெண்பா. இது சிதம்பரம் ஈசானியமடம் ஸ்ரீ ராமலிங்க சுவாமிகள் செய்த நூல். 133 அதிகாரத்திற்கும் 133 பாடல்களும், பாயிரம் இரண்டு பாடல்களும், கொண்டது. சுவாமிகள் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் தில்லையிலும் சென்னையிலும் மிகவும் பிரசித்தமாய் விளங்கிய பெரும் புலவர், சிறந்த தமிழறிஞர்; வீர சைவ சமயத் துறவி. பல நூல்களை அச்சிட்டவர், பல நூல்களுக்கு உரையும் எழுதியவர். சிதம்பரத்தில் நடராஜப் பெருமான் துவஜ ஸ்தம்பத்துக்கு மேல்பால் உள்ள தூணிலிருக்கும் தண்டபாணியை விளித்து இவ் வெண்பா நூல் பாடினார் என்பர். சுவாமிகள் விரிவான கல்வி கேள்வி யுடையவராகையால் அரிய புராணச் செய்திகள் பலவற்றை இந்நூலில் அமைத்துப் பாடியிருக்கிறார்.

சுவாமிகளிடம் மாணாக்கராய் இருந்த குமார வீரையர் என்ற பண்டிதர் எழுதிய உரையோடு 1892ல் இந்நூல் வெளியாயிற்று. இப்போது இதை மீண்டும் சிதம்பரம் குமரன் செந்தமிழ் நூற்பதிப்புக் கழகத்தார் அழகாக அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள். அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ் விரிவுரையாளர் செ. வேங்கடராமச் செட்டியார் முன்னுரையில் நூல் நயங்களை நன்கு எடுத்துக் காட்டியுள்ளார். வரவேற்கத் தக்க பதிப்பு. —ஆசிரியர்

---

### மாசி மாத விசேட தினங்கள்

5 (16—2—66) காரிநாயனார் விழா
7 (18—2—66) சிவராத்திரி விழா
9 (20—2—66) கோச்செங்கட் சோழ நாயனார் விழா
23 (6—3—66) மாசிமக விழா
25 (8—3—66) எறிபத்தநாயனார் விழா.

## சங்கம் : *தமிழ் மாதப் பத்திரிகை*

நந்தி நகர், பிஜித் தீவுகள் இப் பெயர் கொண்ட பத்திரிகையின் மூன்று இதழ்கள் (1965 ஆனி – புரட்டாசி) வரப் பெற்றோம் இவ்விதழ்களில் 1964 சமாஜ ஆண்டு விழாச் சைவர் மகாநாட்டுத் தமிழ் உரை, மதுரை ஆதீனத் தலைவர் ஆன்மாக்களுக்குக் கடவுள் துன்பம் அளிப்பது கூட நன்மைக்கு என்ற கட்டுரையும் காணப்படுகின்றன. சரஸ்வதி தத்துவம், பழமொழி விளக்கங்கள் முதலிய கட்டுரைகள் சிறப்பு. விவேகானந்தா கல்லூரித் திறப்பு விழா பற்றிய விரிவான செய்திகள் உள்ளன. படங்கள் பல அச்சிடப்பட்டுள்ளன. கிரவுன் 1+4 அளவில் நியூஸ்பிரிண்ட் காகிதத்தில் 12 பக்கம் உலகச் செய்திகளும் பாகிஸ்தான் படையெடுப்புச் செய்திகளும் தாங்கி வெளி வருகிறது. பத்திரிகையின் நோக்கம் பிஜீத் தீவில் வாழும் தமிழ் மக்களிடையே தெய்வ உணர்ச்சியைப் புகட்டுவதும் பல துறை உலக அறிவை அவர்களுக்கு ஊட்டுவதும் என்று தெரிகிறது. நல்ல முயற்சி ; வாழ்க சங்கம் ; வளர்க அதன் தொண்டுகள்.

(ஆசிரியர்)

1965ல் சமாஜத் தேர்வில் வெற்றி பெற்றவர்கள் விவரம் வருமாறு :—

# சைவப் புலவர் தேர்வு

| எண் | | | வகுப்பு |
|---|---|---|---|
| 1. | | அ. பாலசுப்பிரமணியன் | I |
| 2. | 128 | சி. பொன்மணி | II |
| 3. | 134 | த. அன்னலட்சுமி | ,, |
| 4. | 136 | சு. இரத்தினம் | ,, |
| 5. | 143 | V. T. செல்லதுரை (மட்டக்களப்பு) | ,, |
| 6. | | க. செல்லப்பா | ,, |
| 7. | 132 | க. தங்கராசா | III |
| 8. | 133 | க. ஜெயமணி | ,, |
| 9. | 135 | ஸ்ரீ அப்புதுரை | ,, |
| 10. | 137 | த. இராசரத்தினம் | ,, |
| 11. | 139 | சி. இராசேஸ்வரி | ,, |
| 12. | 140 | க, சிற்றம்பலம் | ,, |

(திரு. அ. பாலசுப்பிரமணியன் அவர்கள் முதல் வகுப்பில் வெற்றி பெற்றதால் அதற்குரிய பரிசுத் தொகையாக நம் சமாஜ அன்பர் ஒருவர் வைத்துள்ள மூலதனத்திலிருந்து வரும் வட்டித் தொகையாகிய ரூ. 50/– (ஐம்பதினையும்) பரிசாகக் கொடுத்துள்ளோம் என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்)

## இளஞ்சைவப் புலவர் தேர்வு

| எண் | | | வகுப்பு |
|---|---|---|---|
| 1. | 570 | கை. நமசிவாயம் | I |
| 2. | 572 | வை. இராமகிருஷ்ண ஐயர் | II |
| 3. | 575 | வெள்ளைத்தம்பி தம்பிராசா | ,, |
| 4. | | தி. கோலப்பன் செட்டியார் | ,, |

# சென்னைச்
# சைவ சித்தாந்த மகா சமாஜம்

## 60-ஆம் ஆண்டு நிறைவு விழா.

## 1-1-1966

---

## சைவ மங்கையர் மாநாடு

---

தலைமையுரை

திருமதி. இராதாதியாகராசன்

# சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜம்

## 60-ஆம் ஆண்டு நிறைவு விழா.

## சைவ மங்கையர் மாநாட்டுத் தலைமையுரை.

### திருமதி. இராதாதியாகராசன்,

" கற்பனை கடந்த சோதி கருணையே உருவ மாகி
அற்புதக் கோலம் நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடம் செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி "

சிவநெறிச் செல்வியர்களே, அன்பர்களே,

அன்னம் பாலிக்கும் தில்லையில், பொன்னம்பலவன் அருள்நிழலில், சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாசத்தின் வைரவிழா நடைபெறுவது சைவப் பெருமக்கள் அனைவர்க்கும் மகிழ்ச்சி தருவதாகும். அவ்விழாவின் ஒரு கூறு ஆகிய சைவ மங்கையர் மாநாட்டுக்குத் தலைமை தாங்கும் பெருமையும் பொறுப்பும் எனக்கு எய்தியது, அக்கூத்தப் பெருமானுடைய தண்ணிய பேரருள் என்று எண்ணி, அதனை எய்துவித்த மகா சமாசத்தின் வைரவிழாக் குழுவினர்க்கு என் மனம் கலந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

சென்ற பல்லாண்டுகளாகச் சமாச ஆண்டு விழாக்களில், சைவ மங்கையர்க்குத் தனி மாநாடு அமைத்து, அவர்கள் சைவசமயக் கருத்துக்களைத் தங்களிடையே அளவளாவி

இன்புறுமாறு செய்வது மரபாக இருந்துவருவதைச் சமாசத்தின் வரலாறு கூறுகிறது. இம் மாநாடுகளில், சைவ வொழுக்கமும் தமிழ்ப் புலமையும் நிறைந்த நன்மங்கையர் பலர் தலைமை தாங்கியும், சமயக்கருத்து நிரம்பிய சொற் பொழிவுகளைச் செய்தும் அரும்பணி புரிந்துள்ளனர். அந்த மரபு வழுவாது, இவ்விழாவிலும், சைவ மங்கையர் மாநாடு கூட்டி, தகுதியும் சைவ நூற்புலமையும் சான்ற பெருமடந்தையரைச் சொற்பொழிவு செய்ய ஏற்பாடு செய் திருப்பது மிக்க மகிழ்ச்சி தருகிறது. மேலும், மங்கை பங்கனுதலால், சிவ பரம்பொருளின் அருள்நெறியான சித்தாந்த சைவ மாநாட்டில், மங்கையர் மாநாடு ஓர் அங்க மாகத் திகழ்வது பொருத்தமாகவும் இருக்கிறது.

இங்ஙனம், வரலாற்றுச் சிறப்பும் தகுதியும் ஒருங்கு வாய்ந்த மங்கையர் மாநாட்டில், வந்திருக்கும் சைவ மகளி ராகிய உங்களைக் காணும் போது, சைவத்தின் மாண்பும் சைவ மங்கையரின் சமயப்பணியும் என் மனத்தில் தோற்றமளிக் கின்றன.

சைவம் என்னும் சொல், இப்போதுள்ள பழந்தமிழ் நூல்களில், மணிமேகலையில்தான், முதன்முதலாகச் ''சைவவாதி'' என்ற தொடரின்கண் இயைந்து தோன்றுகிறது. அதனுல், சைவம் என்பது அக்காப்பியக் காலத்தேயே மக்கள் வழக்கில் நிலவி யிருந்தமை புலனுகும். அதன்பின், திருமூலர் அருளிய திருமந்திரத்துள், பல இடங்களில் சைவம் என்ற சொல் பயிலுவதைக் காண்கின்றேம். பின்தோன்றிய சைவத் திருமுறைகள், சிவபெருமானையே, ''சைவன்'' என்று குறிப் பதை அறிகின்றேம். ஞானசம்பந்தர்,

"சீருறு தொண்டர் கொண்டடி போற்றச்
செழுமலர் புனலொடு தூபம்
தாருறு கொன்றை தம்முடி வைத்த
சைவனுர் தங்கிடம், எங்கும்
ஊருறு பதிகள் உலகுடன் பொங்கி
ஒலிபுனல் கொளஉடன் மிதந்த
காருறு செம்மை நன்மையால் மிக்க
கழுமல நகர் எனலாமே"

என்றும், "அறிவிலாதவர் மொழி, தஞ்சம் என என்றும் உணராத அடியார் கருது சைவன் இடமாம்" (வேதிகுடி) என்றும்,

"வெங்கடுங் காட்டகத்து ஆடல்பேணி
விரிபுன் சடைதாழத்
திங்கள் திருமுடிமேல் விளங்கத்
திசையார் பலிதேர்வார்
சங்கொடு சாயல் எழில் கவர்ந்த
சைவற்கு இடம்போலும்
பைங்கொடி முல்லை படர்புறவில்
பரிதிந் நியமமே"

என்றும் வரும் திருப்பாட்டுக்களில், சிவனைச் சைவன் என்றே குறிக்கின்றூர்; இவ்வழக்கு நெடிது தொடர்ந்திருந்தமையை மணிவாசகர், "ஐயா றதனில் சைவ ஞகியும்" என்பதனுல் அறிகின்றேம்.

அங்ஙனமாயின், சைவம் என்பதன் பொருள் யாது? திருமூலர், அதன் பொருளை,

"சைவம் சிவத்துடன் சம்பந்தமாவது;
சைவம் தனைஅறிந்தே சிவம் சாருதல்;
சைவம் சிவம்தன்னைச் சாராமல் நீவுதல்;
சைவம் சிவானந்தம் சாயுச் சியமே,"

என்று நான்கு வகையாக விளக்குகின்றூர்.

முதலாவது, சிவத்துடன் சம்பந்தமாவது சைவம் என்பது. அதாவது, சிவத்துக்கும் உயிர்க்கும் உள்ள சம்பந்தத்தை அறிந்து மேற்கொள்வது. இத்தொடர்பை, மகன் - தந்தை முறை, ஆண்டான் - அடிமை முறை, நட்பு முறை, மாணவன் - ஆசிரியன் முறை என்று நால்வகையாகக் கூறுவர். இவற்றை, முறையே, சற்புத்ர மார்க்கம், தாச மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்று சைவாசிரியர்கள் உரைப்பர்.

இந்நால்வகைத் தொடர்புகளில், ஞானசம்பந்தர், மகன்மை முறைமையில் (சற்புத்திர நெறியில்) சிவத்தோடு தொடர்பு கொண்டார். அதனை,

'' தாயும் நீயே தந்தை நீயே
சங்கரனே அடியேன்
ஆயின் நின்பால் அன்பு செய்வான்
ஆதரிக்கின்றது உள்ளம்
ஆய மாய காயம் தன்னுள் ஐவர்நின்று
ஒன்ற லொட்டார்
மாயமே என்று அஞ்சுகின்றேன்
வலிவலம் மேயவனே ''

என்றும்,

'' மற்றொரு பற்றிலை நெஞ்சமே மறைபல
கற்றநல் வேதியர் கழுமல வளநகர்ச்
சிற்றிடைப் பேரல்குல் திருந்திழை யவளொடும்
பெற்று எனை ஆளுடைப் பெருந்தகை இருந்ததே''

என்றும் உரைக்கின்றார். தாயும் நீ தந்தையும் நீ என்பது பலருடைய பாட்டுக்களில் காணப்படுமாயினும்,'' திருந்திழை யவளொடும் பெற்று எனை ஆளுடைப் பெருந்தகை '' என்பது ஞானசம்பந்தரது மகன்மை முறையைத் தெளியக் காட்டுகிறது. அவரே, இறைவன் தனக்குப் பாலூட்டிய குறிப்பை,

" போதையார் பொற்கிண்ணத்து அடிசில் பொல்லாதுஎனத்
தாதையார் முனிவுறத் தான்எனை ஆண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்
பேதையா ளவளொடும் பெருந்தகை இருந்ததே ".

என்று உரைப்பதனல், அவரது மகன்மைத் தொடர்பு நன்கு வலியுறுகிறது.

திருநாவுக்கரசர், சிவனைத் தனக்குத் தலைவனாகவும், தான் அவனுக்குத் தொண்டனாகவும் முறைமை கொண்டார். இதனைச் சிவஞானசித்தியார் " தாதமார்க்கம் " என்று குறிக்கிறது. நாவுக்கரசர் திருவதிகை இறைவன்பால் குறையிரந்து பாடுமிடத்து,

" முன்னம் அடியேன் அறியாமையினல்
முனிந்து என்னை நலிந்து முடக்கியிடப்
பின்னை அடியேன் உமக்கு ஆளும்பட்டேன்;
சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்;
தன்னை அடைந்தார் வினைதீர்ப்ப தன்றோ
தலையா யவர்தம் கடனாவதுதான்,
அன்ன நடையார் அதிகைக் கெடில
வீரட்டானத் துறை அம்மானே "

என்ற திருப்பாட்டில், தான் அடியனானதையும், சிவனைத் தலைவனாகக் கொண்டதையும், " பின்னை அடியேன் உமக்கு ஆளும்பட்டேன் " என்றும், " தன்னை அடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் தம் கடனாவது " என்றும் உரைப் பதால், அவரது ஆண்டான்—அடிமை முறை விளங்குகிறது.

அன்றியும், திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், திருவீழிமிழலையில், இறைவன் அருளால் படிக்காசு பெற்ற போது, ஞானசம்பந்தர் பெற்றது வாசி உடையதாகவும்,

நாவரசர் பெற்றது வாசி இல்லாததாகவும் இருந்தமைக்குக் காரணம் காட்ட வந்த சேக்கிழார்,

"ஈசர் மிழலை இறையவர்பால்
இமயப்பாவை திருமுலைப்பால்
தேசம் உய்ய உண்டவர்தாம்
திருமாமகனார் ஆதலினால்,
காசு வாசியுடன் பெற்றார்;
கைத்தொண்டாகும் படிமையினால்
வாசி யில்லாக் காசுபடி
பெற்று வந்தார் வாகீசர்"

என்று உரைப்பதாலும், ஞானசம்பந்தர் மகன்மை முறையும், நாவுக்கரசர் தொண்டர் முறையும் மேற்கொண்டமை அறிகின்றோம்.

இனி, சுந்தரர், சிவன்பால் தோழமை கொண்டவர் என்பது நாடறிந்தது. அது "சகமார்க்கம்" ஆகும். அவர் திருவாரூரில் புற்றிடங்கொண்ட பெருமானை வழிபட்டிருக்கையில், "நம்மை உமக்குத் தோழமையாகத் தந்தோம்" என்றொரு வாக்கு வானில் எழுந்து ஒலிக்க, அன்று முதல் அவர் தம்பிரான் தோழர் எனப்படுவா ராயினார். இச்செய்தியை, அவரது வரலாறு,

"வாழிய மாமறைப் புற்றிடங்கொள்
மன்னவன் ஆரருளால் ஓர்வாக்குத்
தோழமையாக உனக்கு நம்மைத்
தந்தனம், நாம் முன்புதொண்டு கொண்ட
வேள்வியில் அன்று நீ கொண்ட கோலம்
என்றும் புனைந்து நின் வேட்கை தீர
வாழிமண் மேல் விளையாடுவாய் என்று
ஆரூரர் கேட்க எழுந்த தன்றே"

என்றும், "அன்று முதல் அடியார்களெல்லாம் தம்பிரான்

தோழர் என்றே அறைந்தார்'' என்றும் கூறுகிறது. சுந்தரரும், தாம் பாடிய அருமைத் திருப்பதிகத்தில்,

''ஏழிசையாய், இசைப்பயனாய்,
இன்னமுதாய், என்னுடைய
தோழனுமாய், யான்செய்யும்
துரிசுகளுக்கு உடனாகி,
மாழையுண்கண் பரவையைத் தந்து
ஆண்டானை மதியிலா
ஏழையேன் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே''

என்று பாடுங்கால், ''என்னுடைய தோழனுமாய்'' என்று எடுத்துமொழிவது, அவர் கொண்ட தோழமை முறையை வற்புறுத்துகின்றது.

மணிவாசகர்க்கும் சிவத்துக்கும் உள்ள தொடர்பு, மாணவர்க்கும் ஆசிரியர்க்கும் உள்ள தொடர்பாகும் என்பதை, அவரது வரலாறு காட்டுகிறது. அது ''சன்மார்க்க நெறி'' எனப்படுகிறது. அவரும் தாம் அருளிய திருவாசகத்தில்,

''அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரனாகி அருளிய பெருமையைச்
சிறுமை யென்று இகழாது''

என்றும், ''கோகழி யாண்ட குருமணி தன் தாள் வாழ்க'' என்றும், ''கூடல் இலங்கு குருமணி போற்றி'' என்றும்,

''சீவார்ந்து ஈமொய்த்து அழுக்கொடு திரியும்
சிறுகுடில் இதுசிதையக்
கூவாய், கோவே, கூத்தா, காத்து ஆட்
கொள்ளும் குருமணியே,
தேவா, தேவர்க் கரியானே சிவனே
சிறிது என்முகம் நோக்கி
ஆவா என்ன ஆசைப்பட்டேன்
கண்டாய் அம்மானே'' (ஆசை)

என்றும்,

"கொடு மாநரகத்து அழுந்தாமே
காத்து ஆட்கொள்ளும் குருமணியே
நடுவாய் நில்லா தொழிந்தக்கால்
நன்றே எங்கள் நாயகமே" (ஆனந்தமாலை)

என்றும் தெரிவிக்கின்றார்.

இவ்வாறு, தந்தை, தலைவன், தோழன், ஆசிரியன் என்ற முறையில் சிவத்தோடு சம்பந்தமாவது பத்திநெறி யாகும். இந்நெறிகளில் சிவனைத் தலைவனாகக் கொண்டு பத்தி பண்ணும் தாதமார்க்கம், சரியையாய்ச் சாலோக முத்தி பயக்கும் என்பர்; தந்தை நிலையில் வைத்துச் சிவத்தின்பால் அன்பு செய்து ஒழுகும் சற்புத்திர மார்க்கம், கிரியையாய்ச் சாமீபம் அளிக்கும் என்பர்; நண்பனாகக் கருதிப் பரவும் சகமார்க்கப் பத்தி நெறி யோகமாய்ச் சாரூப முத்தி தரும் என்றும், சன்மார்க்கநெறி ஞானவொழுக்கமாய்ச் சிவசாயுச்சியம் கொடுக்கும் என்றும் கூறுவர். இதனை,

"சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்ர மார்க்கம்
தாதமார்க்கம் என்றும் சங்கரனை அடையும்
நன்மார்க்கம் நாலவைதாம், ஞான யோக
நற்கிரியை சரியை என நவிற்றுவதும் செய்வர்
சன்மார்க்க முத்திகள் சாலோக்ய சாமீப்ய
சாரூப்ய சாயுச்யம் என்று சதுர்விதமாம்;
முன்மார்க்க ஞானத்தால் எய்தும் முத்தி
முடிவென்பர் மூன்றினுக்கும் முத்திபதம் என்பர்"

என்று அருணந்தி சிவனார் கூறுகின்றார்.

இவ்வண்ணம், ஆன்மாவாகிய உயிர், சிவத்தோடு தந்தை தலைவன் முதலாகத் தொடர்பு கொண்டு பத்தி செய்து, பதமுத்தியும் பரமுத்தியும் எய்தும் என்று சிவாகமங்கள் முடிந்தது முடித்துக் கூறுவது பற்றி, எடுத்த எடுப்பிலேயே, திருமூலர் "சைவம் சிவத்தோடு சம்பந்தமாவது" என்று சொல்லுகின்றார்.

இனி, இப்பத்தி நெறியால் விளைவது ஞானமாகும். "ஞானத்தால் வீடு என்றே நான்மறைகள் புராணம் நல்ல ஆகமங்கள்" சொல்லும் எனச் சிவஞான சித்தியார் தெரிவிக்கிறது. ஞானநெறி, ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, ஆன்ம லாபம் என மூவகையாகும். அவற்றை,

"தேசுற மருவும் ஆன்ம தெரிசனம் ஆன்மசுத்தி
ஆசிலா ஆன்மலாபம் ஆக மூன்றாகும்; மூன்றும்
பாசம தகல ஞானம் பற்றல், தான் பணியை நீத்தல்,
ஏசில் நேயத் தழுந்தல் எனும் இவற்று அடங்குமன்றே"

என்று உமாபதி சிவனார் உரைக்கின்றார். அம்மூன்றனுள், ஆன்ம தரிசனம், "சைவம் தனை அறிந்தே சிவம் சாருதல்" என்றும், ஆன்ம சுத்தி, "சைவம் சிவம் தன்னைச் சாராமல் நீவுதல்" என்றும், ஆன்ம லாபம், "சைவம் சிவானந்தம் சாயுச்சியமே" என்றும் இத்திருமந்திரத்துள் அடங்கு கின்றன.

ஆன்மாவாகிய உயிர், தன்னை அறிந்து, தன்னை உடைய சிவத்தை அறிந்து அதனைச் சாருதல் சைவ நெறியாகும். தன்னை அறிந்த வழி, தன்னை உடைய சிவத்தை அறிவதும், அதனைச் சார்வதும் நிகழ்வதால், "சைவம் தனை அறிந்தே சிவம் சாருதல்" என்று உரைக்கின்றார். "தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்" என்று மெய்கண்டாரும் விளம்புவர்.

உயிர் தன்னை அறியுமிடத்து, தான் அறிவுடைப் பொருள், தனக்கு உறுதுணையாய் நிற்கும் உடம்பும், மன முதலிய கருவி களும், உலகப் பொருள்களும் அறிவில்லாத சடப்பொருள் என்று கண்டு, அறிவுடைய தன்னோடு அறிவில்லாத உடம்பு முதலியவற்றைக் கூட்டி, உலகில் வாழச் செய்தது. சிவம்

என்று அறிந்து கொள்ளுகிறது. அறிவுடைய பொருள், அறிவுடைய பொருளோடு கூடுமேயன்றி, அறிவில்லாத பொருளோடு கூடாது. அறிவில்லாத பொருள் அறிவுடைய உயிரைத் தானுக நாடி அடையாது. ஆகவே, இவ்விரண்டையும் ஒன்று கூட்டி வாழச்செய்வது, இரண்டு மல்லாத வேருகிய சிவம் என்று உணர்வது, உயிர் தன்னை அறிவதால் உண்டாகும் பயனுகும்.

இங்ஙனம், உயிர், தன்னை அறியுமிடத்துக் காணப்படும் உடல், கருவி, உலகு என்பவற்றைச் சைவநூல்கள் பாசம் என்று வழங்கும். இவற்றின் பண்பு செயல் முதலியவற்றைக் காண்பதும், அவை அறிவில்லாத சடம் என அறிவதும், அவை அறிவுடைப் பொருளாகிய தன்னேடு ஒன்றல்ல என உணர்ந்து, அவற்றைத் தன்னேடு புணர்த்த திருவருளின் துணையாக அவற்றினின்றும் நீங்கல் வேண்டுமெனத் துணிவதும் எனத் தன்னை அறிதல் மூன்று கூறுபடும். இவற்றை முறையே தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி என்பர். இதனை,

"மண்முதல் சிவமது ஈருய் வடிவு காண்பதுவே ரூபம்
மண்முதல் சிவமது ஈருய் மலம்சடம் என்றல் காட்சி
மண்முதல் சிவமது ஈருய் வகையதில் தான் நில்லாது
கண்ணுதல் அருளால் நீங்கல் சுத்தியாய்க் கருத லாமே*"

என்று உண்மை நெறி விளக்கம் விரித்து உரைக்கின்றது,

---

*மண் முதலிய பூதம் ஐந்தும், தன்மாத்திரை ஐந்தும், கண் முதலிய அறிகருவி ஐந்தும், வாய் முதலிய செயற்கருவி ஐந்தும், மன முதலிய கரணம் நான்கும், கலை முதலிய வித்தியா தத்துவம் ஏழும், சுத்த வித்தை முதல் சிவம் ஈருக நின்ற சுத்த தத்துவம் ஐந்தும் என்ற முப்பத்தாறும் அடங்க, "மண் முதல் சிவமது ஈரும்" என்று கூறுகின்றனர்.

இவ்வாறு, சடமாய், வேருய், நீங்கத் தக்கனவாய் உள்ள உடல் கருவி முதலியவற்றின் தொடர்பு, உயிர்க்கு எங்ஙனம் உண்டாயிற்று எனின், அவற்றின் வேருகிய உயிர், மலத்தால் பிணிப்புண்டு, அறியாமை இருளில் ஆழ்ந்து அல்லற்படுவது கண்டு, அருளே வடிவான சிவபரம்பொருள், இவ்வுடல் முதலியவற்றை மாயை என்ற அறிவில்லாத சடசத்தியிலிருந்து படைத்து உயிரோடு சேர்த்து உலகில் வாழச் செய்கிறது. இதனை,

“உணர்வு எழாச் செயிர் வலியினுல் உறவினை இழுந்து
தணவுருத ஆணவத்தினைத் தலைப்படும் உயிர்கட்கு
அணவு தாய் என இரங்கி ஆரருளினுல் பருவப்
புணர்வு தேர்ந்து உடல் கரணமும் புவனமும் பொருத்தும்”

என்று கச்சியப்ப முனிவர் காரணம் காட்டி உரைக்கின்ருர். இதன்கண், ஆணவமாகிய மலத்தால் உளதாகும் அறியாமையை, இப்பாட்டில், “உணர்வு எழாச் செயிர்” என்றும், அதனுல் மயங்கிச் செய்வகை அறியாது வருந்தும் உயிரினின்றும், அந்த ஆணவ மலம் நீங்குவதில்லை என்றற்குத் “தணவுருத ஆணவம்” என்றும் குறிக்கின்ருர். ஆணவத்தின் பிணிப்பிலிருந்து உயிரை நீக்குதற்காக, சிவபரம் பொருள், தன் பேரருளால் உடம்பும் உலகுமாகிய பொருள் களைப் படைத்து அளிக்கின்றது; அதனை, “அணவு தாய் என இரங்கி ஆர் அருளினுல் பருவப் புணர்வு தேர்ந்து உடல் கரணமும் புவனமும் பொருத்தும்” என்று அறிவிக்கின்ருர்.

இனி, அம்மலத்தின் பிணிப்பிலிருந்து உயிர் தானே விலகலாமே எனின், செம்பில் களிம்பு போல அம்மலம் கலந் திருக்கிறது; செம்பினுல் களிம்பை நீக்க முடியாது; களிம்பும்

செம்பை விட்டு நீங்காது; அதுபோல, உயிரினல் மலத்தை நீக்க முடியாது; அம்மலமும் உயிரை விடுவதில்லை.

"செம்புதான் களிம்பைப் பாற்று அறியாது;
களிம்புதான் தீர்வதும் இல்லை;"

அதுபோல்,

"வெம்பிய மலத்தை உயிர் விடல் அறியா;
விடுவதும் மலம் தனக்கு இல்லை"

என்று விளக்கி, செம்பினை ஒரு மருந்திட்டுப் பொன்னுக்கும் புலவன் போல, சிவபரம்பொருள், மாயையென்ற மருந்து கொண்டு, உடலும் உலகுமாகிய பொருள்களைப் படைத்து உயிர்க்கு அளித்து அதனைப் பிணித்திருக்கும் மலத்தினை மாற்றுகின்றது; இதனை,

"பைம்பொன் ஆக்குவதோர் மருந்தும்
அம்மருந்தின் பாங்கறி புலவனும் உளரால்;"

அதுபோல,

"நம்பிய மாயை உருவினைக் கொடுத்தே
நாயகன் புகர்மலம் கழிக்கும்,"

என்று அம்முனிவர் கூறுகின்றார்.

ஆகவே, ஆணவமலப் பிணிப்பை நீக்குதற்கு, இறைவன் மாயையினின்றும் படைத்தளித்த உடம்பும், மனம் முதலிய கரணங்களும், உலகும், யாவும் தனக்குத் துணைக்கருவிகளே: உறுதிப்பொருள்கள் அல்ல என்று பகுத்துணர்ந்து நீங்குவது ஆன்மாவாகிய உயிர்க்கு முறை; அன்றி, அவற்றின்மேற் பற்றுக்கொண்டு அலமருவது முறையாகாது எனத் தேர்வது,

தன்னை அறியும் உயிர்க்கு முதற்படியாகும். இதனைத் தத்துவசுத்தி என்று சைவநூல் உரைக்கின்றது.

இவ்வாறு, (மண் முதலாகக் காட்டிய) பாசப் பொருள்களை அறிந்து, அவை தன்போல் உணர்வுடையன அல்ல என்று உணர்ந்து நீங்கும் உயிர், (தத்துவ சுத்தி பெறும் உயிர்), அவற்றைக் கொண்டு, செய்வன செய்து, பெறுவன பெற்றுப் பயன் நுகர்வதும், நுகருமிடத்து, அவற்றை இயக்கிப் பயன் கொள்ளும் முதல் தானே என உணர்வதும் **ஆன்மரூபம்.** அவ்வாறு உணருங்கால், உடம்பும் உலகுமாகிய பொருள்களின் துணையில்லையாயின் ஒன்றையும் உணரமுடியாத தனது சிறுமையை உயிர் அறியும். அறியுமிடத்துத் தன்பொருட்டு இவற்றைப் படைத்தளித்த சிவத்தின் திருவருளை அறிந்து அதனைவிடத் தனக்குப் புகல் வேறில்லை என்று தெளிவது **ஆன்மதரிசனம்.** அத்தெளிவால், எல்லாம் திருவருளின் செயலேயன்றித் தன்செயல் என ஒன்றும் இல்லை என்று அறிந்து அத்திருவருளைச் சாரும். இவ்வாறு, பாசப் பொருளைப் பயன்கொள்வது உயிராகிய தானேயன்றி எனைப்பாசமும் அன்று, பதியுமன்று என உணர்வதும், அதற்கேதுவாகிய திருவருளைத் தெளிவதும் செய்து, அத்திருவருளின் வழி நிற்கும் நிலை **ஆன்ம சுத்தி** யாகும். இதனை,

> "இன்னணம் பாசம் அகறலும், உறவும்
> இகலுறு பகையும் நாடாது,
> மன்னிய தானே முதல் என நிற்றல்
> மாசுயிர்க்கு உரு; இதுகாறும்
> அன்னியத் தழுங்கும் நினக்கு உயிர் அருள் என்று
> அகற்ற அவ்வருளினுன் முதல் என்று
> உன்னுதல் காட்சி; உதுகொடு செயல்நேர்ந்து
> ஒழிந்து அருளாய்விடல் சுத்தி"

என்று கச்சியப்ப முனிவர் கூறுவர்.

இது, உயிர், தன்னையும் சிவத்தையும் அறியும் நெறி யாகும். பாசப் பொருளாகிய உடம்பொடு கூடி உலகில் வாழுமிடத்து, இன்பம் தோன்றும் போது, அதன்பால் விருப்பும் உறவும் கொண்டு, துன்பம் எய்துங்கால், அதன்பால் வெறுப்பும் பகையும் கொள்வது உயிரின் செயற்பண் பாதலால், அதனை விடுத்து, உடம்பு உலகுகளிடத்தே நட்பும் பகையுமின்றி, அவற்றை இயக்கிப் பயன்கொள்ளும் முதல் தானே எனக் காண்பது உயிரின் உண்மை உருவம்; இது பற்றியே, இப்பாட்டு, ''உறவும் இகலுறு பகையும் நாடாது மன்னிய தானே முதல் என நிற்றல் மாசுயிர்க்கு உரு'' என்று கூறுகிறது. மலமாகிய மாசுடன் கூடியிருப்பதால் உயிர் இங்கே ''மாசுயிர்'' எனப்படுகிறது.

உயிர்க்கு, ஒருபால் பாசப் பொருளும், ஒருபால் பரம் பொருளின் திருவருளும் பற்றுக்கோடாதலால், பாசப் பொருளினின்றும் தான் வேறு என உணரும் போது, திருவருள் அதன் முன்னே நின்று பாசத்தின் நீங்குதற்குரிய அறிவுத்துணை புரியும்; அதனல் திருவருளே தனக்கு முதல் என்று உயிர் துணிவு கொள்ளும்; அந்நிலையே உயிர் தன்னை உள்ளவாறு காணும் காட்சி (தரிசனம்) ஆதலால் ''இதுகாறும்; அன்னியத்து அழுங்கும் நினக்கு உயிர் அருள் என்று அகற்ற அவ்வருளினன் (அருளையுடையவன்) முதல் என்று உன்னுதல் காட்சி'' என்று ஆசிரியர் அறிவிக்கின்ருர்.

இவ்வாறு தனக்குத் திருவருளே முதல் என்று உணரும் உயிர், நினைப்பதற்கும் பேசுதற்கும் செயல் பல செய்தற்கும், கருவிகளான மனமும், வாயும், உடலும், திருவருளால் இயங்குவன என்று அறிந்து, தான் செய்வன அனைத்தும்

அத்திருவருளின் செயல் என்று ஒழிந்து, தன் செயல் அற்றிருக்கத் தலைப்படும் நிலை, செயலறுதி எனப்படும் ஆன்ம சுத்தியாகும். அதனை உணர்த்தற்கே, "உதுகொடு செயல் நேர்ந்து ஒழிந்து அருளாய்விடல் சுத்தி" என்று இப்பாட்டுக் கூறுகிறது. திருவருளே எல்லாவற்றிற்கும் முதலாக இருப்பதை, ஆசிரியன்மார் எல்லார்க்கும் முன்னே கண்டு கூறிய காரைக்காலம்மையார்,

"அருளே உலகெல்லாம் ஆள்விப்பது ஈசன்
அருளே பிறப்பறுப்ப தானல் - அருளாலே
மெய்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவது எனக்கு"

என உரைப்பது காணலாம்.

இந்த அருட்காட்சி, தன்னைப் பற்றி நின்ற பாசப் பொருள்களிலிருந்து தான் வேருய் நிற்கும் இயல்பைத் தெளிவுறுத்துவதால், உயிர், தன்னை மலத்தினின்றும் நீக்கி உய்தி பெறுவிக்கும் அத்திருவருட்கு முதல்வன் சிவனே எனத் தேர்ந்துணர்கிறது. பின்பு, அவனது திருவருள் ஞானச் சூழலையே சார்தற்கு விரும்புகிறது. உமாபதி சிவனுரும் இக்கருத்தையே,

"தத்துவ மானவற்றின் தன்மைகள் உணருங்காலை
உய்த்தறிந் திட உதிப்பது ஒளிவளர் ஞானமாகும்;
அத்தன்மை அறியுமாறும் அகன்றிட, அதுவாய் ஆன்மாச்
சுத்தமாம்; சுத்த ஞானத்து ஒருமுதல் தோன்றும் அன்றே"

என்று சுருக்கமாகக் கூறுகின்ருர். இங்கே "ஒளிவளர் ஞானம்" என்றது, திருவருள் ஞானம். அந்த ஞானம் சிவத்தைக் காட்டுவதால், உயிர் பாசத்தினின்றும் நீங்கிச் சிவத்தைச் சார்ந்து சிவமாந் தன்மை எய்துகிறது; அதனுல்

"அதுவாய் ஆன்மாச் சுத்தமாம்" என்று கூறுகிறார். ஒளிக்கு, விளக்கு முதலாவது போல, அருளுக்கு முதல் சிவமாவதால், திருவருள் புலனாகியவழிச் சிவம் தோன்றும் என அறிதல் வேண்டும். இதனால், உயிர் பாசக்கூட்டத்தினின்றும் நீங்கித் தனக்குப் பற்றுக்கோடாகிய திருவருளைச் சாருவது சிவநெறியாம் என்று விளங்கும். இது பற்றியே திருமூலர், "சைவம் தனை அறிந்தே சிவம் சாருதல்" என்று கூறுகின்றார்.

இனி, "சைவம் தனையறிந்தே சிவம் சாருதல்" என்ற திருமூலனார், சாரும் ஒழுக்க நெறியை விளக்கச் "சைவம் சிவம் தன்னைச் சாராமல் நீவுதல்" என்று கூறுகின்றார். மலப்பிணிப்புற்று மாயையாகிய பாசக்கூட்டத்திற் கிடந்து திருவருளால் அம் மலமறைப்பினின்றும் நீங்கித் தூய்மை யுறுவது உயிர்; சிவமோ தன்னியல்பில் தூய்மையும் செம்மையும் உடையது. அதனால், சிவமும் சிவச்சார்பு எய்திய உயிரும் ஒன்றெனை உரைப்பதற்கு இடமில்லை. மலத்தின் நீங்கித் தூய்மையும் சிவமாம் தன்மையும் எய்தினும், மலத்தால் பிணிப்புற்றிருந்த சிறுமை உயிரின்பால் இருப்பதால், சிவம் வேறெனை உணர்தலே முறை. அதனால், சிவத்தைச் சார விரும்பும் ஆன்மா, உலகியல் வாழ்விடைக் கண்ட பாசப்பொருள்களைச் சேர்ந்தவன் அல்ல நான் என உணர்ந்து நீங்கியது போல, சிவமும் நான் அல்ல என்ற கருத்துடன், சிவத்துக்குரிய அருளுணர்வில் ஒடுங்கித் தொண்டினைச் செய்து வழிபடவேண்டும். இதனை,

"கண்டஇவை அல்லேன் நான் என்று அகன்று காணாக்
கழிபரமும் நான் அல்லேன் எனக் கருதிக் கசிந்த
தொண்டினொடும்,

ஒழுக வேண்டும் என்று அருணந்தி சிவனார் கூறுகின்றார். பாசத்தொகுதிகட்கும் உயிர்த் தொகுதிகட்கும் வேறாய், மேலாய் நிற்கும் பரம்பொருளாதலால், அதனைத் தன்னோடு ஒப்பக் கருதுவது கூடாது என்றற்குக் "கழிபரமும் அல்லேன் நான்" என்று கருதவேண்டும் என்று கூறுகிறார். இதனைத்தான் திருமூலர் "சைவம் சிவம் தன்னைச் சாராமல் நீவுதல்" என்று குறிக்கின்றார். அது கருத்தாயின், சிவத்தொடு கூடிச் சிவானந்தம் பெறுதற்கு வழி யாது என்ற வினா எழும். இதற்கு விடை கூறும் அருணந்தி சிவனார், மனம் கசிந்து தன்முனைப்பு இன்றிச் சிவத்தொண்டு புரிதல் வேண்டும் என்று அறிவுறுத்துவாராய், "கசிந்த தொண்டினோடு" என்று குறிக்கின்றார்.

இத்தொண்டினை இன்னது என விளக்க வந்த சிவஞான யோகிகள், "தொண்டாவது சார்ந்ததன் வண்ணமாம் இயல் புடைய உயிர், கழிபரமும் நானல்லேன் எனக் கருதியவழி, முன்போல முனைத்தலின்றி, ஓங்குணர்வின் உள்ளடங்கி அதன் வழித்தாய் நிற்றல்" என்றும், "முனைத்து நின்று செய்யும் உலகத் தொண்டின் நீக்குதற்குக் கசிந்த தொண்டு என விசேடித்தார்" என்றும் கூறுகின்றார். எனவே, தன் முனைப்பு அற்றவிடத்து ஓங்கும் அருளுணர்வில் ஒடுங்கி அதன் வழி நிற்பது இங்கே குறிக்கப்படும் தொண்டு என்பதாயிற்று.

இவ்வாறு, "கழிபரமும் நானல்லேன்" என வேருகக் காண்பது சிவரூபம் எனவும், தன்முனைப் பின்றித் திருவருள் எனச் செயலறுதல் சிவதரிசனம் எனவும், அத்திருவருளில் தோய்ந்து ஒடுங்குவதைச் சிவயோகம் எனவும் சிவநெறிச் செல்வர்கள் வகுத்துரைப்பர். அம்மூன்றையும்,

"மேதகும் அருளான் முதல் என நினைத்தல்,
விழுத்தகும் அருளினால் அநுசெய்
தீதறு தொழில்கள் செய்வல் என்று எண்ணும்
செயலறல், திகழ் அருள்மயமாய்ப்
போதமுற்று ஒடுங்கல் என முன்கிளந்து
போந்தவற்று அடங்கிய மூன்றும்
ஆதிதன் உருவம் தரிசனம் யோகம் ஆம்"

என்று கச்சியப்ப முனிவர் விளக்குகின்றார்.

சிவத்தின் வேறாய் நின்றாலன்றி, மேலே கூறிய சிவரூபமும் சிவதரிசனமும் பெறுதல் ஆகாமையால், அவ்வாறு நிற்பது சிவநெறியாம் என்றற்குச் "சைவம் சிவம் தன்னைச் சாராமல் நீவுதல்" என்றார். எனவே, சிவத்தைச் சாராமல் அதன் திருவருளில் தோய்ந்து ஒடுங்கவேண்டும் என்பது முடிபாம். அதுவே, சிவயோகம் என்று சிவாகமம் கூறுகிறது. இதனை,

"எப்பொருள் வந்து உற்றிடினும் அப்பொருளைப் பார்த்து அங்கு
எய்தும் உயிர்தனைக் கண்டு, அவ்வுயிர்க்கு மேலாம்
ஒப்பில் அருள்கண்டு, சிவத்து உண்மை கண்டு,
உற்றதெல்லாம் அதனாலே பற்றி நோக்கித்
தப்பினைச் செய்வதும் அதுவே, நினைப்பும் அதுதானே,
தரும் உணர்வும் பொசிப்பும் அது தானே யாகும்,
எப்பொருளும் அசைவில்லை என அந்தப் பொருளோடு
இயைவதுவே சிவயோகம் எனும் இறைவன் மொழியே"

என உண்மை நெறி விளக்கம் விரித்துரைக்கிறது. இக்கருத்தையே,

"அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகனாகி இறைபணி நிற்க,
மல மாயை தன்னொடு வல்வினை யின்றே"

என்று சிவஞானபோதம் கூறுகிறது.

உயிர், தன்னையும் சிவத்தையும் அறியாது, உலகியலில் தோய்ந்திருக்கும் போதும் சிவம் அவ்வுயிரோடே இருக்கிறது. ஆனால், தன்முனைப்பு ஓங்கி நிற்பதால், உயிர்க்கு உடனிருக்கும் சிவத்தை உணர முடிவதில்லை. அந்த நிலையைச் சிவஞான போதம் " அவனே தானே ஆகிய நெறி " என்று குறிக்கிறது. திருவருள் ஞானம் பெற்று, சிவமே தன் செயல் யாவற்றிற்கும் முதல் என்று உணரும்போது, தன் செயலற்று, எல்லாம் சிவம் என்று அதனுள் ஒன்றி நிற்கவேண்டிய நல்லுணர்வு உயிர்க்கு எய்தும். எவ்வாறு ஒன்றுவது எனின், முன்பு தான் செய்த செயல் அனைத்திற்கும், சிவன் உடனிருப்பினும், தானே முதல் என நின்றதுபோல, சிவ வுணர்வு தோன்றியதும், தன்னை யிழந்து சிவமே முதல் என அதன் அருளில் ஒடுங்கவேண்டும்; இதையே, "ஏகனாகி இறைபணி நிற்க" என்று மெய்கண்டார் அறிவுறுத்துகின்றார்.

" நம் செயலற்று இந்த நாம் அற்றபின் நாதன்
தன் செயல் தானே என்று உந்தீபற "

என்று பெரியோரும் கூறுகின்றனர்.

இவ்வாறு ஏகனாகி நிற்பதால், உயிரைப் பற்றி நின்ற மலம், மாயை, வினை என்ற மூன்றின் தொடர்பும் உயிர்க்கு இல்லையாம் என்பதற்காக, "மல மாயை தன்னொடு வல்வினை இன்றே" எனச் சிவஞானபோதம் கூறிற்று. எனவே, சிவனருளில் ஒடுங்கிச் சிவத்தோடு இயைவதே உயிர் செய்தற் குரிய செயலாவது தெளிவாம்.

இவ்வண்ணம், திருவருளையும், அதற்கு முதலான சிவத் தையும் கண்டு, அதனுள் ஒடுங்குவதால் உயிர்களாகிய நாம் பெறும் பயன் யாது? சிவயோகத்தால் — சிவத்தைச் சாராது

அதன் அருளில் மூழ்குவதால் — விளைவது என்னை? என்ற ஐயம் இங்கே எழுகிறது. இதற்கு விடைகூறும் முறையில், உயிர் சிவானந்தப் பெரும் போகத்தை நுகரும் எனச் சான்றோர் கூறுவர். உணர்வு ஒத்த இருவர் கூடுமிடத்தே விளைவது இன்பம் என்பது யாவரும் அறிந்தது. இதையே திருமூலர், "சைவம் சிவானந்தம் சாயுச்சியமே" என்று அருளுகின்றார். அதனை அருணந்தி சிவனார்,

"ஒன்று காமல் இரண்டா காமல்
ஒன்றும் இரண்டும் இன்று காமல்
தன்னது பெருமை தாக்கா துயினும்
என்னது பெருமை எல்லாம் எய்தித்
தன்னை எனக்குத் தருவதை அன்றியும்
என்னையும் எனக்கே தந்து தன்னது
பேரா னந்தப் பெருங்கட லதனுள்
ஆரா இன்பம் அளித்தனன்"

என்று கூறுகின்றார். இக்கருத்தினைச் சிவபோகம் எனக் குறித்துக் கச்சியப்ப முனிவர் விளக்குகின்றார்.

"ஒன்றுறும் அதனால் ஒரு பொளாகாது,
இரண்டினால் வேறும் ஆகாது,
தொன்றுறும் நிலையே நிலையதாய்ச் சேர்ந்து
துன்னலும் துன்னுருமையும் அற்று
அன்றும் ஆணவத்தின் அழுந்தியாங்கு, அறிவாய்
அறிவினுள் அழுந்தி, ஆங்கு அறிவு
பொன்றியும் பொன்றது அவசமாய் இன்பப்
புணரிவாய் மடுப்பது போகம்."

இங்கே, மலநீக்கம் பெற்றுத் தூய்மை எய்திய உயிர், சிவத்தோடு ஒன்றும் என்பதனால், அவ்வுயிரும் சிவமும், நீரும் நீரும் கலந்து ஒன்றுவது போல, ஒரு பொருளாய்விடும் என்பது கருத்தன்று; அன்றியும், உயிர் என்றும் சிவம் என்றும்

இரண்டாகக் கூறுவதால், ஒன்றின்றென்று வேறு எனவும் கருதப்படா; அதுபற்றியே, ''ஒன்றுறும் அதனால் ஒரு பொருளாகாது, இரண்டினால் வேறும் ஆகாது'' என்றார். ஞாயிற்றின் ஒளியில் விளக்கொளிபோலச் சிவவொளியில் உயிராகிய அறிவொளி கலந்து, சேர்தலும் சேராமையும் இன்றி, உடனாய் நிற்கும் என்பது விளங்க, ''தொன்றுறும் நிலையே நிலையதாய்ச் சேர்ந்து துன்னலும் துன்னுறாமையும் அற்று'' என்றார். அன்று (கேவலத்தில்) உயிர் ஆணவமாகிய மலத்தோடு கலந்து அத்துவிதமாய் இருந்தது போல, இன்று மலம் நீங்கிய தூய நிலையில், அறிவுமயமாய்ச் சிவத்தின் பேரருளில் தோய்ந்து கலத்தலும் கலவாமையும் இன்றி அத்துவிதமாய், (உடனாய்ச்) சிவபோகமாகிய இன்பத்தை நுகரும்; அதுபற்றியே, ''அன்றும் ஆணவத்தின் அழுந்தி யாங்கு அறிவாய் அறிவினுள் அழுந்தி ஆங்கு அறிவு, பொன்றியும் பொன்றாது அவசமாய் இன்பப் புணரிவாய் மடுப்பது'' என்று உரைக்கின்றார்.

இவ்வுடன்நிலையை விரிவாகத் தருக்க முறையில் ஆராய்ந்து காட்டுகிறார் அருணந்தி சிவனார். ''உயிரும் அறிவாகிய சித்துப் பொருள்; சிவமும் அறிவாகிய சித்துப் பொருள்; இரண்டும் ஒன்றுதலில் குறையேது?'' என்ற வினாவை எழுப்பிக்கொண்டு, இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை விளக்க முற்பட்டு,

''சிவன் சீவன் என்றிரண்டும் சித்து ஒன்றும் என்னில்,
சிவன் அருட்சித்து இவன் அருளைச்சேரும் சித்து; அவன்தான்
பவம் கேடு புத்தி முத்தி பண்ணும் சித்து; அவற்றில்
படியும் சித்து, அறிவிக்கப்படுஞ் சித்தும் இவன்தான்,
அவன்தானே அறியும் சித்து, ஆதலினால் இரண்டும்
அணைந்தாலும் ஒன்றாகாது அநந்நியமாய் இருக்கும்''

என்று கூறுகின்றார். உயிர் சிவமாம் தன்மை எய்திச் சிவத்தோடு கூடுமிடத்தும், அது சிவமேயாகி விடுவதில்லை என வற்புறுத்தி, உயிரின் நிலையை, "உம்பர்பிரான் உற்பத்தி ஆதிகளுக்கு உரியன், உயிர் தானும் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்து" எனத் தெளிவுபடுத்துகின்றார்.

மேலும், உயிர், தூய்மையால் சிவமாந்தன்மை பெறினும், சிவத்தின் தூய்மையை நோக்க, மலத்தோடு கலந்திருந்த சிறுமை யுடையதாகையால், முடிவில் ஒன்றுதலின்றி உடனாதலைக் கண்டே, ஞானசம்பந்தரின் முத்திப் பேறு கூறுங்கால், "போத நிலை முடிந்தவழிப் புக்கு ஒன்றி உடனானார்" என்று சேக்கிழார் பெருமானும் தெரிவிக்கின்றார்.

அன்றியும், அறிவுடைய பொருள் இரண்டு கூடி ஒன்றாகுமாயின், அக்கூட்டத்தின் இன்பப்பயனை, அவற்றில் ஒன்றும் நுகர்தல் இல்லையாம்; உடனாகும்போதுதான் அக்கூட்டத்து இன்பத்தை நுகர முடியும். இதுபற்றியே, முத்தி நிலையில் திருநாவுக்கரசர் ஞானவடிவில் உடனாய் நின்று பெற்ற இன்ப நலத்தைச் சேக்கிழார், "நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாகி, அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்ட அரசு அமர்ந்திருந்தார்" என்று கூறுகிறார். இங்கே, அவர், "அரசு ஒன்றானார்" என்னாதது குறிக்கத்தக்கது.

இவ்வாறு, சிவானந்த வடிவாகிச் சிவனடிக்கீழ் வாழும் சிவானந்த சாயுச்சியத்தைப் பெறுவது சைவம் என்கிறது திருமந்திரம். இப்போது அதனை நோக்குவோம்.

**"சைவம் சிவத்தோடு சம்பந்தமாவது;**
**சைவம் தனையறிந்தே சிவம் சாருதல்;**
**சைவம் சிவம்தன்னைச் சாராமல் நீவுதல்;**
**சைவம் சிவானந்த சாயுச்சியமே"**

இதன்கண், முதலிற் கூறப்படும் சிவ சம்பந்தம், சிவத்தைத் தந்தையாகவும், தலைவனாகவும், நண்பனாகவும், ஆசிரியனாகவும் உறவுகொண்டு வழிபடும் பத்திநெறி. பத்தியின் விளைவுஞானம். அதனால், உயிர் தன்னை யறிதலையும், சார்பாகிய சிவத்தை அறிதலையும், இரண்டாம் அடியில், "சைவம் தனையறிந்தே சிவம் சாருதல்" என்று கூறி, மூன்றாமடியில், சிவத்தின் வேறாய் நின்று அதன் திருவருளில் தோயும் சிவயோகத்தைச் "சைவம் சிவம் தன்னைச் சாராமல் நீவுதல்" என அறிவுறுத்தி, சைவ ஞானப் பயனாகிய சிவபோக நுகர்ச்சியைச் "சைவம் சிவானந்த சாயுச்சியமே" என்று நான்காமடியில் நிறுத்தியிருப்பதைப் பார்க்கலாம்.

இங்ஙனம், முதலிற் பத்தி நெறி காட்டிப் பின்பு ஞான நெறி அருளும் இறைவன் அருட்செயலை மணிவாசகப் பெருமான், ஒரு திருவாசகத்தில் அழகாகக் காட்டுகிறார்.

"முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தம் மலம் அறுவித்துச் சிவமாக்கி எனைஆண்ட
அத்தன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே"

இத் திருவாசகம் பலரும் நன்கு அறிந்ததாதலால், இதனை எடுத்துக் கொள்கிறேன். இதன்கண் முத்தி நெறி என்றது ஞான நெறி. முத்திக்கு ஞானமே வாயில்.

"ஞானத்தால் வீடு என்றே நான்மறைகள் புராணம்
நல்ல ஆகமங்கள் சொல்ல, அல்லவாம் என்னும்
ஊனத்தார் என் கடவர்"

என்று அருணந்தி சிவனார் கூறுவர்.

இப்பாட்டின் முதலடியில், மணிவாசகர், முத்தியாகிய ஞான நெறி அறியாமல், ( அருள் நெறி யறியாமல் ) உலகியல் வாழ்வுக்குரிய பொருள் நெறியில், பொன்னும் பொருளும் போகமுமே விழைந்து வருந்தும் மக்களோடு கூடி அவற்றைப் பெறுதற்கே முயன்று வருந்தினேன் என்பாராய், "முத்தி நெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேன்" என்று கூறு கின்றார். உலகியற் பொருள் வேண்டி முயல்கின்ற மக்களை "மூர்க்கர்" என்பது என்? பொன்னும் பொருளும் ஆகிய உலகியற் பொருள்கள் ஓரிடத்தும் நிலையின்றி ஓடித் தமது நிலையாத் தன்மையைக் காட்டிய வழியும், அவற்றை விடாப்பிடியாய்த் தொடர்ந்து முயல்வதால், மக்களை மூர்க்கர் என்று குறிக்கின்றார். "மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா" என்பது பழமொழி. மேலும், அவர்கள் இயல்பிலேயே மூர்க்கர் அல்லர்; நிலைத்த வாழ்வும் நிலையான இன்பமும் தரும் முத்தி நெறியை அறியாமையால், உலகியற் பொருள் தரும் சில் வாழ்நாள் சிற்றின்பத்தையே பற்றி மூர்க்கராயினர் என்று தெரிவித்தற்கு, "முத்தி நெறி அறியாத மூர்க்கர்" என்று அவர்களது உண்மை நிலையை உரைக்கின்றார்.

பொருள்மேல் உள்ள பற்றினை மாற்றிப் பரம்பொருள் பால் பற்றுக்கொள்ளச் செய்வது, அன்பு கொள்ளச் செய்வது, பத்தி. பத்தி என்ற வடசொல்லுக்கு நேரிய தமிழ்ச்சொல் அன்பு. இறைவன்பால் கொள்ளுகின்ற அன்பு ஞானத்தை நல்குவது. அது பற்றியே, ஞானசம்பந்தர் பாடிய திருப் பாசுரத்துக்கு உரைகண்ட சேக்கிழார், "ஞானம் ஈசன்பால் அன்பே என்றனர் ஞானம் உண்டார்" என்று கூறுகின்றார்.

இங்ஙனம், மூர்க்கரொடு முயலும் எனக்கு இறைவன், முதற்கண் ஞானத்துக்கு வாயிலாவது பற்றி, பத்தி நெறியை அறிவுறுத்தினன் என்பாராய், ''பத்தி நெறி அறிவித்து'' என்று கூறுகின்றார். ''அடியேனை ஆண்டுகொண்டு, பத்திக் கடலுள் பதித்த பரஞ்சோதி'' என்றும், ''சித்தமே புகுந்து எம்மை ஆட்கொண்டு, தீவினை கெடுத்து, உய்யலாம் பத்தி தந்து, தன் பொற்கழற்கணே பன்மலர் கொய்து சாத்தலும், முத்தி தந்து இந்த மூவுலகுக்கும் அப்புறத்து எமை வைத்திடும்'' என்றும் கூறுவதால், பத்தி நெறியே இறைவன் முதற்கண் அருளுவது காணலாம். காரண காரிய முறையில் அறிவித்தாலன்றி, பத்தியும் மக்கள் மனத்தில் நிலைபெறாது என்றற்குப் ''பத்தி நெறி அறிவித்து'' என்றார். பத்தி செய்தற்குரிய நெறியறியாது தாம் இருந்ததை, ''உன்னை வந்திப்பதோர் நெறியறியேன், நின்னையே அறியேன், நின்னையே அறியும் அறிவறியேன், உடையாய், அடியேன் உன் அடைக்கலமே'' என்று சொல்லி, பின்பு இறைவன் அறிவருளிய செய்தியை,

''அறிவிலாத எனைப்புகுந்து ஆண்டுகொண்டு அறிவதை அருளி
மேல்நெறியெலாம் புலமாக்கிய எந்தை''

என்று மாணிக்கவாசகரே உரைக்கின்றார். இவ்வாறே திருநாவுக்கரசர்க்கு இறைவன் அறிவு நல்கினன் என்பதை,

''பன்னிய செந்தமிழ் அறியேன் கவியேன் மாட்டேன்
எண்ணோடு பண்ணிறைந்த கலைக ளாய
தன்னையும் தன்திறத் தறியாப் பொறியிலேனைத்
தன்திறமும் அறிவித்து நெறியும் காட்டி''

(எறும்பியூர்)

ஆட்கொண்டான் என்றும்,

"இருளாய உள்ளத்தின் இருளை நீக்கி
இடர்பாவம் கெடுத்து ஏழையேனை உய்யத்
தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போல்
சிவலோக நெறியறியச் சிந்தை தந்த
அருளானை"

என்றும் கூறுகின்றார். இவற்றால், இறைவன் பத்தி நெறி நல்கிப் பின் முத்திக்குரிய நெறியை — ஞான நெறியை — உணர்த்துவன் என்று அறியலாம். இது பற்றியே ஞான சம்பந்தரும், "பத்தி மலர்தூவ, முத்தியாகுமே" என்று சுருக்கமாக உரைக்கின்றார்.

இங்ஙனம், பத்தி நெறி அறிந்து ஒழுகுமிடத்துப் பழவினைத் தொடர்பு போந்து அறிவை மயக்குவதுண்டு. "நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றும் தன், உண்மை யறிவே மிகும்" என்று திருவள்ளுவரும் கூறுவர். வினையால் அறியாமை விளையும்; ஆதலால் வினைதீர்தற்கு ஞானத்தை நாடவேண்டும் என்ற கருத்துப்பட,

"வினையால் அசத்து விளைதலால் ஞானம்
வினைதீரின் அன்றி விளையாவாம் - வினைதீர
ஞானத்தை நாடித் தொழுவே அதுநிகழும்;
ஆனத்தால் அன்பின் தொழு"

எனச் சிவஞானபோதம் செப்புகிறது.

ஞானம் பெறுதற்குத் தடையாவது, உயிரைப் பற்றி யிருக்கும் ஆணவமாகிய மலத் தொடர்பு; அதனை,

"தூய நினைவைத் தூமொழியைத்
தூய தொழிலைத் தோற்றாது
தீய நினைவைத் தீமொழியைத்
தீய தொழிலைத் தவத் தோற்றும்
ஆய தனி ஆணவப் பகை"

என்று அறிஞர் உரைப்பர். அது, தன் தொழிலைச் செய்தற்கு மனவெல்லையின்கண் உள்ள சித்தத்தைத் தனக்கு உரியதாக்கிக் கொள்ளும்;இறைவன் திருவருளில் தோய்ந்து செயற்படுதற்கும் அச் சித்தமே கருவியாகும். ஆதலால், சித்தத்தைப் பற்றி நிற்கும் மலத்தைச் சிவபரம்பொருள் ஞானம் அருளிப் போக்குவது பற்றி, "பழவினைகள் பாறும்வண்ணம் சித்தமலம் அறுவித்து" என்று கூறுகிறார். மலப்பிணிப்பு நீங்கியவழி, அதனைச் சார்ந்து நிற்கும் பழவினைக்கு இடமில்லாது ஒழிதலால், பழவினைகள் பாறும்வண்ணம்" என்று இயம்புகிறார். சிவஞானத்தால், சித்தம், மலம் முதலிய பாசக் கலப்பினின்றும் நீங்கிச் சிவகரணமாவதால், தான் சிவமாம் தன்மை எய்தத் தன்னைச் சிவன் ஆட்கொண்டுவிட்டான் என்று அறிவிப்பதற்காக, "சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்" என்று மகிழ்ந்து, இப்பேறு பிறர்க்கு எய்துவது அரிது என வியந்து, "அத்தன் எனக்கு அருளியவாறு ஆர் பெறுவார் அச்சோவே" என்று பாடுகின்றார். இப்பாட்டால், முதற்கண் பத்தி நெறியும், பின்னர் முத்தியாகிய ஞான நெறியும் சைவச்செந்நெறி யாவது நன்கு தெளியலாம். இவ்வாறே திருமுறைகளில் பத்தியையும் ஞானத்தையும் காரண காரிய நெறியில் காட்டுவது சமய குரவர்களின் இயல்பு. இத் திருவாசகத்திற் போலத் தேவாரத்தில் திருஞானசம்பந்தர்,

"பத்திப்பேர் வித்திட்டே பரந்த ஐம்புலன்கள் வாய்ப்
பாலே போகாமே காவாப் பகையறு வகை நினையா
முத்திக்கே விக்கத்தே முடிக்கும் முக்குணங்கள் வாய்
மூடா ஊடா நாலந்தக் கரணமும் ஒரு நெறியாய்ச்
சித்திக்கே உய்த்திட்டுத் திகழ்ந்த மெய்ப்பரம்பொருள்
சேர்வார் தாமே தானாகச் செயும் அவன் உறையுமிடம்"

என்று பாடுவர்.

இவ்வாறு பத்தியால், மக்கள் உள்ளத்தைச் சிவனது திருவடிக்கண் செலுத்தி, ஞானத்தால் திருவருளில் தோய்ந்து இன்பம் பெறுவிக்கும் நன்னெறியாகிய சைவம், வரலாற்றுக் கால முதற்கொண்டு சேக்கிழார் காலம் வரை, முறையாக வழிவழியே இயங்கி வந்தது. நாடு முழுதும், ஊர்தோறும், பெருங்கோயில்கள் தோன்றி மக்களிடையே சைவ வுணர்வும் ஒழுக்கமும் தழைக்கச் செய்தன. திருமுறை ஆசிரியர்களும், வேற்றுச் சமயங்களால் மக்கள் மனம் கெடாவண்ணம், ஊர் ஊராய்ச் சென்று, சிவ பத்தியும் சிவ ஞானமும் நிறைந்த இசைப்பாட்டு ஓதும் திருப்பணி செய்து, சைவ வாழ்வு பெருகிப் பரவி நிலவும் சிறப்பை உண்டு பண்ணினர்.

பின்னர், மெய்கண்டார், அருணந்திசிவனார் முதலிய ஆசிரியன்மார் தோன்றி, ஞான நெறியைத் தனிப்பட வாங்கி நூல்கள் செய்தனர். ஆயினும், அரசியலிலும் பொது வாழ்விலும் சமய நெறியிலும் தோன்றிய மாறுதல்களால், மக்களிடையே சைவ வுணர்வு சுருங்கத் தலைப்பட்டது. அது கண்ட சைவாசிரியர்களில் ஒருவரான அருணந்திசிவனார்,

"சித்தாந்தத்தே சிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திச்
சென்னம் ஒன்றிலே சீவன் முத்தராக
வைத்து ஆண்டு, மலம் கழுவி, ஞானவாரி
மடுத்து, ஆனந்தம் பொழிந்து, வரும் பிறப்பை அறுத்து,
முத்தாந்தப் பாதமலர்க்கீழ் வைப்பன் என்று
மொழிந்திடவும், உலகர் எலாம் மூர்க்கராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவர், இது என்ன பிராந்தி"

என்று சொல்லி வருந்தினர்.

எனினும், நிலைமை தெளிவு பெறவில்லை. சில நூற்றாண்டு கழித்து அவர்கட்குப் பின்னே தோன்றிய குமரகுருபரர் காலத்திலும் சிவஞானச் செந்நெறி குன்றியே இருந்தது; சிலரே இதன் வழிநின்றனர். அதனால், அவர்,

" ஓரும் வேதாந்தம் என்ற உச்சியிற் பழுத்த
சாரம் கொண்ட சைவ சித்தாந்தத்
தேனமுது அருந்தினர் சிலரே "

என்று குறைபட்டனர்.

இவ்வாறு சைவம் சுருங்குதற்குக் காரணம் யாது என எண்ணிய சான்றோர், செல்வரிடத்துப் பொருள் மையலும் வறியவர்பால் சிறுமையுணர்வும் தோன்றிச் சிவநெறியின் வளர்ச்சிக்குத் தீது செய்துவிட்டன என்று நினைந்து,

" வாழ்வெனும் மையல்விட்டு வறுமையாம் சிறுமை தப்பித்
தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயம் சாரும்
ஊழ்பெறல் அரிது; சால உயர்சிவ ஞானத்தாலே
போழ் இளமதியினானைப் போற்றுவார் அருள்பெற்றாரே "

என்று சித்தியார் கூறியதையே தாமும் மொழிந்தனர்.

நிலத்தில் மேடு பள்ளம் போல, மக்களிடையே செல்வ வறுமைகள் தோன்றுகின்றன; கடல்நீர் தனக்குள் மேடு பள்ளம் இருப்பினும், தனது நிறைவால் சமநிலை தோற்றுவிப்பது போலத் திருவருள் உணர்வு பெருகிய வழிச் சமநிலை தோன்றும்; அதற்கு மக்களிடையே சிவஞானம் நிறைதல் வேண்டும் என வற்புறுத்துவாராய், சான்றோர்,

" தம்மை யுணர்ந்து தமையுடைய தன் உணர்வார்
எம்மை உடைமை எமை இகழார் "

என்று ஒருமை யுணர்வுக்கு வழிகாட்டி, அந்தச் சமநிலை ஞானம் இல்லாமையால், மக்கள் தம்மிற் சிதைந்து விடுகின்றனர்;

" — தம்மை
உணரார் உணரார்; உடங்கு இயைந்து தம்மிற் "

புணரார் என்று மொழிந்தனர்.

ஆனால், சைவத்தின் வரலாறு வேறு காரணம் காட்டுகிறது. ஞானசம்பந்தர் முதலிய சமய குரவர் தோன்றுதற்கு முன்னே தோன்றிப், பத்தியையும் ஞானத்தையும் வாழ்ந்து காட்டிய காரைக்காற் புனிதவதியாரும், சமயத்தின் பொருட்டுத் தவம் மேற்கொண்ட திலகவதியாரும், மங்கையர்க்கரசியும் போன்ற பெண்மணிகள் தோன்றி நல்லாதரவு நல்கும் பேறு, பிற் காலத்தில் சைவத்திற்கு இல்லாது போயிற்று.

மாங்கனி நிகழ்ச்சியால், கணவன் "நற்பெரும் தெய்வம்" என்று நினைந்து தம்மைவிட்டு நீங்கிய போது, காரைக்கால் அம்மையார், சிவநெறியில் ஊன்றி நின்று, தமது மேனி யழகைத் துறந்து எலும்பும் தோலுமாகிய பேய் வடிவு கொண்டு,

" இடர்களை யாரேனும் எமக்கு இரங்கா ரேனும்
படரும் நெறிபணியா ரேனும் - சுடர்உருவில்
என்பருக் கோலத்து எரியாடும் எம்மானுர்க்கு
அன்பறாது என்நெஞ்சு எமக்கு "

என்ற உறுதியுடன் சிவநெறிக்கு ஆக்கம் செய்தார்.

ஞானசம்பந்தரைப் பெற்ற பகவதியார், சைவம் வளர்த்தற்கென்றே தவம் இருந்து, அத்தவப் பயனைப் பெற்ற சம்பந்தர்க்குத் தாய்ப்பாலைத் தரும் போதே "பரமன் தாள்

பரவும் அன்பே திருமுலை சுரந்து அமுது செய்தருளுவித்தார்'' என்று சேக்கிழார் கூறுவர். அதன் பயனுக, ஞானசம்பந்தர், பால்மணம் மாருத முன்பே,

'' சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்,
பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்,
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம் உணர்ந்தார் அந்நிலையில்''

என்று சான்ருேர் புகழுமாறு, ஞானம் பெற்று, '' நாளும் இன்னிசையால்'' சிவம் பெருக்கினுர்.

பாண்டிநாட்டு அரசியாகிய மங்கையர்க்கரசி, தனது நாட்டில், சைவ வுணர்வும் சைவ வொழுக்கமும் தடுமாறிச் சிறுமையுறுவதுகண்டு, மனம் பொருது, திருஞானசம்பந்தரை மதுரைக்கு வருவித்து, நெறிமாறி யிருந்த தன் கணவனைச் சைவனுக்கி மேன்மையுற்ருர். அரசு எவ்வழிக் குடிகள் அவ்வழி என்பதற்கு ஒப்ப நாட்டவரும் சைவராயினர். அதனுல், அவரை,

'' மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமாதேவி''

என்று பாராட்டி,

'' செந்துவர் வாயாள் சேலன கண்ணுள்
சிவன் திருநீற்றினை வளர்க்கும்
பந்தணை விரலாள் பாண்டிமா தேவி
பணிசெயப் பாரிடை நிலவும்
சந்தமார் தரளம் பாம்புநீர் மத்தம்
தண் எருக்கம் மலர் வன்னி
அந்திவான் மதிசேர் சடைமுடி யண்ணல்
ஆலவாய் ஆவதும் இதுவே''

என்று ஞானசம்பந்தர் புகழ்ந்து பாடும் நலத்தால் உயர்ந்தார்.

திலகவதியார் திருநாவுக்கரசரின் உடன்பிறந்த தமக்கை. இளமையிலே பெற்றோரையும், பின்பு தம்மை மணக்க இருந்த கலிப்பகையையும் இழந்தமையால், துயர் மிகுந்து, "தம்பியார் உளராகவேண்டுமென வைத்த" தயாவினுல் உயிர்தாங்கி அருள் நெறியில் நின்ருர். ஆயினும், சிறிது காலத்தில் தம்பியார் வேற்றுச் சமயம் புகுந்து தம்மைக் கைவிட்டுச் சென்ருராக, திலகவதியார், அத்துன்ப நிலையிலும் திருவதிகை அடைந்து, தமது தம்பி மீண்டும் சிவநெறிக்கே உரியாராய்த் திருத்தொண்டு புரியவேண்டுமெனச் சிவபரம்பொருளைப் பாவிஞர்.

"தாண்டுதவ விளக்கனையார் சுடரொளியைத் தொழுது, என்னை
ஆண்டருளும் நீராகில் அடியேன்பின் வந்தவனை
ஈண்டு வினைப் பரசமயக் குழிநின்றும் எடுத்தருள
வேண்டும்எனப் பலமுறையும் விண்ணப்பம் செய்தனரால்"

என்று அவர் வரலாறு கூறுகிறது.

இப்பெருமாட்டிகளின் பின், சைவவுலகில் பெண்ணியலார் தோன்றிப் பெருமை பெற்றதாக வரலாறு இல்லை. மக்கட் பெருக்கத்தால் மாண்புற்று விளங்கும் பிற சமயங்களின் வளர்ச்சியில், மடந்தையர் பலர் ஈடுபட்டுப் புகழ் மேம்பட்டதை அச்சமயங்களின் வரலாறுகள் விளம்புகின்றன. இடைக் காலத்தில், அரசியல் விடுதலைப் போரில் பெண்டிர் பலர் மிக்க ஆர்வத்துடன் செம்மையாகப் பணி செய்து சிறப்பெய்தி இருக்கின்றனர். இதனை நோக்கும்போது, அரசியலிற் போலச் சமய ஞானத்துறையில் மகளிர்க்கு வாய்ப்பும் வசதியும் கிடைக்கவில்லை என்றுதான் நாம் எண்ணத் தோன்றுகிறது. வேத வேதாந்தங்கள் நிலவிய காலத்தில் மைத்திரேயி முதலிய

மகளிர் சமய ஞானத்துறையில் தக்க புலமை கொண்டு விளங்கினர் என வரலாறு கூறுவதால், மகளிர் சமய ஞானக் கல்விக்கு ஏற்புடையர் என்பதும் நன்கு தெரிகிறது.

கல்லாய் உருமாறிக் கிடந்த அகலிகை, இராமன் கால் துகள்பட்டதும் முன்பு போல் பெண்ணுருக் கொண்டு நின்றதைக் கூற வந்த கம்பர்,

" கண்ட கல்மிசைக்
காகுத்தன் கழல் துகள் கதுவ
உண்ட பேதமை மயக்கற
வேறுபட் டுருவம்
கொண்டு மெய்யுணர் பவன்கழல்
கூடிய தொப்பப்
பண்டை வண்ண மாய்
நின்றனள் மாமுனி பணிப்பான் "

என்று கூறுகின்றார். அகலிகையின் உரு மாற்றத்துக்கு, அறியாமையின் நீங்கி உணர்வு ஒழுக்கம் வேறுபட்டு மெய் யுணர்வால் இறைவன் திருவடி அடையும் ஆன்ம நிகழ்ச்சியைக் கம்பர் உவமமாகக் கூறுவது நமது கருத்தைப் பணி கொள்ளு கிறது. ஞானம் பெறுவது ஆடவர்க்கே உரிமை யென்று கருதும் கருத்து கம்பர்க்கு உடன்பாடன்று; "மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் மனம் என்பது ஒன்றேயன்றோ" என்பது அவரது கொள்கை; அது பற்றியே, பெண்மகள் மாற்றத்துக்கு ஞானப்பொருளை உவமம் காட்டுகிறார். இதனால், ஞானசிரியன் அருளுரை பெற்று அறியாமை நீங்கிப் பத்தியும் ஞானமும் கொண்டு பெண்களும் மேன்மை பெறலாம் என்பது தெளிவாம்.

இன்று, மக்களிடையே சமய வுணர்வும் ஒழுக்கமும் குறைந்திருப்பது கண்கூடு. ஒரு சமயத்தின்பாலும் ஒதுங்காது

பொது நிலை புரியும் அரசின் துணை பெற்றே கல்வி நிலையம் பலவும் இயங்குதலால், அவற்றிற் பயிலும் சிறுவர்க்குச் சமயக்கல்வி நல்குவது இயலாதாகிறது. பொது மேடைகளும் பொது நிலையங்களும் அரசியல் பொருளியல் பேச்சுக்களுக்கே பேரிடமாகப் பிறங்குகின்றன, கோயில்கள் காலந்தோறும் நடக்கும் வழிபாட்டிலேயே கருத்தைச் செலுத்துகின்றன. புராணச் செய்திகளை எடுத்துக் காட்டும் திரைப்படக் காட்சிகள் மக்கட்குப் பொழுதுபோக்காக அமைகின்றனவே யன்றிப் பத்தியும் அதனை வலியுறுத்தும் ஞானமும் நல்குவனவாக இல்லை. இதனால், மக்களிடையே நம் சைவ வுணர்வு ஒழுக்கங்களைப் பரப்புதற்கு எற்ற வாய்ப்புக் கிடைப்பது அருமையாகிறது.

இனி, இதற்கு எற்ற இடம் குடும்பமே என்பது விளங்கும். குடும்ப வாழ்விலிருந்தே நாம் முன்பு கண்ட சைவப் பெருமங்கையர் சமயப்பணி புரிந்தனர். ஒவ்வொரு குடும்பத்தையும் முற்பட நின்று நடத்துவோர் மகளிராக இருப்பதால், மகளிர்க்கே சமய வுணர்வு நல்கும் பொறுப்பும் எய்துகிறது.

இந்நாளில் மகளிர் பலர் கல்வி யறிவுடையராய் இருப்பதால், தம்முடைய மக்கட்குக் கல்வி கற்பிக்கும் பொறுப்பு அவர்கட்கு வந்திருக்கிறது. கல்வி கற்பிக்கும்போது கடவுள் வழிபாட்டிலும் சிறுவர்கள் ஈடுபடுமாறு செய்தால் பத்தி நெறி தானே உண்டாகும். அவர்கட்கு அறிவு வளர வளரப் பத்தி பண்ணுதற்குரிய காரணத்தைத் தெரிவிக்கலாம். காரணம் தெரியாமல் செய்யும் பத்தி மூட பத்தியாய்ப் பிற்காலத்தே மறைந்து போகும். சிவத்துக்கும் உயிர்களுக்கும் உலகத்துக்கும் உள்ள தொடர்பையும் அத்தொடர்புண்டான காரணத்தையும் விளக்கினால் பத்தி பண்ணவேண்டிய இன்றியமையாமை எளிதில் விளங்கி விடும். அதன் பயனாக இளைஞர்

உள்ளத்தில் பத்தியும் ஒழுக்கமும் திண்ணமாக அமைந்து விடும்.

இத்துறையில் நமது இந்தியப் பேரரசின் தலைவர் திரு. **இராதாகிருட்டினன் அவர்கள்** நல்லதொரு கருத்தைத் தெரிவித்துள்ளார். சமய வுண்மைகளை எளிமைப்படுத்திச் சிறுவர்கள் விரும்பிப் படிக்கும் வகையில் சிறு நூல்கள் எழுதி வெளியிடவேண்டும் என்று அவர் கூறுகின்றார். அவ்வாறு செய்தால் அவற்றைத் தாய்மார்கள் படித்துத் தம்முடைய மக்களுக்குக் கற்பிப்பது எளிதாகும். தாய் தந்தையர் சமய வுணர்வும் ஒழுக்கமும் உடையவர்களானால், மக்கள் அவர்களைப் பின்பற்றுவார்கள், அவர்கள் சமயத்தைப் பற்றிக் கேட்கும் வினாக்களுக்குக் காரணகாரிய முறையில் தெளிவான விடையளிக்க முடியும். ஆகையால், சமய வுண்மைகளைத் தாய்மார்களும் இளமகளிரும் முதலில் கற்றுக் கொள்ள வழி செய்ய வேண்டும்.

இன்று, இம்மாநாட்டில் சமய வுணர்வு நிறைந்து தகவுடைய புலமை மிகுந்த சைவ மங்கையர் பலர் வந்துள்ளனர். அவர்களுடைய அறிவுரை நான் இதுகாறும் கூறிய கருத்துக்குப் பெருந்துணையாகும். ஆகவே, சைவம் பற்றியும், சைவமங்கையர் மாண்பு பற்றியும், அவர்கள் இனிச் செய்தற்குரிய பணி பற்றியும் என் உள்ளத்தில் எழுந்த கருத்துக்களை இங்கே உரைப்பதற்கு வாய்ப்பளித்த சமாச வைரவிழாக் குழுவினர்க்கு என் நன்றியை மறுபடியும் தெரிவித்துச் சைவப் புலமைத் தையல் நல்லாரைத் தாம் மேற்கொண்ட பொருள் பற்றிச் சொற்பொழிவு செய்யுமாறு அழைக்கின்றேன்.

**வாழ்க சைவமங்கையர்! வளர்க சைவம்!!**

4. கூட்டு வழிபாட்டுப் பாமாலை.

இதனைத் தொகுத்தவர் சமாஜச் செயலாளர் திரு. கொ. நீ. சிங்காரவேலு முதலியார் M. A. ஆவர். பலர் விருப்புக்கு மியைந்தவாறு ஐந்து வரிசையில் பாக்களைத் தொகுத்துத் தந்துள்ளார். ஒவ்வொரு வீட்டிலும் குறைந்தது பத்துப் புத்தகங்களாவது வாங்கி வைத்திருக்க வேண்டும். காலைக்கடன்கள் முடித்தபின்னர் நீறணிந்து குறிப்பிட்டயிடத்தில் வீட்டிலுள்ளோர் யாவரும் அமர்ந்து இக்கூட்டு வழிபாட்டுப் பாமாலையிலுள்ள வரிசைகளில் ஏதாவது ஒரு வரிசையினை ஓதிப் பயன் பெறலாம். தம் பொருட் செலவில் சமாஜ வெளியீடாக இதனை வெளியிட்டுள்ளார்.

விலை ரூ. 0–20.

5. திருவருட்பயன்.

நிரம்ப அழகிய தேசிகர் உரையுடன்.
பதிப்பாசிரியர்: வித்துவான் க. வெள்ளைவாரணனார்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்:

இதனைப் பதிப்பாசிரியரே தம் சொந்தப் பொருட்செலவில் நம் சமாஜ வயிர விழா நினைவு மலராக வெளியிட்டுள்ளார். பதிப்பாசிரியர் தற்காலத்துத் திருமுறையில் சிறந்த ஆராய்ச்சியறிஞராய்த் திகழ்தலோடு சாத்திர வல்லுநராயு மிருப்பது யாவரும் அறிந்ததொன்று. அதனால் நூலில் நிரம்ப அழகிய தேசிகர் உரையை அச்சிட்டிருப்பதுடன் விளக்கம் என்று ஒரு பகுதி சேர்த்து அங்கங்கு திருமுறைப் பகுதிகள், பிற சாத்திரப் பகுதிகள் முதலியவற்றையும் ஒப்புநோக்கி வெளியிட்டிருக்கும் திறம் மெச்சத்தக்கது. காலத்துக்கேற்றவாறு இத்தகைய சாத்திரப் பதிப்புகள் வெளிவரவேண்டுவது மிக மிக இன்றியமையாததொன்றாகும். இதன் விலை ரூ. 1–25.

இவை தவிர திருவாசகக் குறிப்புகள், தத்துவப் பிரகாசம் என்ற இரு நூல்களும் திரு. மு. அருணாசலம் அவர்கள் சொந்தப் பொருட் செலவில் சமாஜ வெளியீடாக வெளியிடப் பெற்றன. (இவைபற்றி அடுத்த இதழில் காண்க)

இந்நூல்கள் யாவும் மிகச் சிறந்தன. ஆகவே வேண்டுவோர் உடனே சமாஜச் செயலாளருக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளவும். அஞ்சற் செலவு தனி. பணம் பெற்ற பின்னரே நூல்கள் அனுப்பி வைக்கப் பெறும்.

(துணையாசிரியர்)

## பிற செய்திகள்

கிழக்குத் தாம்பரம் ஸ்ரீ கற்பக விநாயகர் பக்தஜன சபையின் எட்டாம் ஆண்டு நிறைவு விழா 30—1—66 ஞாயிற்றுக் கிழமை நிகழ்ந்தது. திரு. அம்பை சங்கரனர் "பாவை நோன்பு" என்பது பற்றிப் பேசினர்கள்.

திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபையில் தொடர்ந்து வித்துவான் திரு. அ. நடேச முதலியார் அவர்களால் விளக்கப் பட்டு வந்த திருவெம்பாவை விளக்கவுரை நிறைவு நாள் 2—1—1966ல் சென்னை இந்து அறநிலைய ஆணையர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார் B.A.B.L., அவர்கள் தலைமையில் கொண்டாடப் பெற்றது. அன்று இறுதிப் பாசுரத்துக்கு திரு. முதலியார் அவர்களால் விளக்கம் கொடுக்கப் பெற்றது. புலவர் அவர்களுக்குப் பாராட்டுதலும் அன்பளிப்பும் வழங்கப் பெற்றன.

சங்ககிரி அருள்நெறித் திருக்கூட்டப் பதினொன்றாவது ஆண்டு நிறைவு விழா 14—1—66 வெள்ளியன்று சங்ககிரி பஞ்சாயத்து ஒன்றிப்பு ஆணையர் திரு. கு. சதாசிவம் அவர்கள் தலைமையில் நிகழ்ந்தது. பலர் சொற்பொழிவாற்றினர்.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் அருள் நந்தித்தம்பிரான் சுவாமிகள் அருளாணையின் வண்ணம் 21—1—66 தை அமாவாசையன்று காவிரிப்பூம்பட்டினத்துத் திருப்பல்லவனீச் சுரத்திலும் திருச்சாய்க்காட்டிலும் அன்னம் பாலிப்பு நிகழ்ந்தது.

---

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan, Edited by M. Arunachalam, M. A., and Published by S. Satchidanandam Pillai, B. A., L. T., for the Saiva Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.